بسم الله الرحمن الرحيم

## அலட்சியமாகக் கருதப்படும்

# ஆபத்தான குற்றங்கள்

அரபியில்:

அஷ்ஷைக் முஹம்மது ஸாலிஹ் அல்முனஜ்ஜிது

தமிழில்:

கா. ஹுஸைன் கனி பாகவி

முஃப்தி அ. உமர் ஷரீஃப் காஸிமி



## About This Book

| | |
|---|---|
| Name of the Book | : **ALATCHIYAMAHA KARUTHAPPADUM AABATHANA KUTRANGAL** |
| Name in Arabic | : Muharramaat |
| Author | : As-Shaikh Muhammed Saalih |
| Translated by | : K. Hussain Gani Baqavi<br>Mufti A. Omar Sheriff Qasimi |
| Language | : Tamil |
| Edition | : 11th (June 2017) |
| Total Pages | : 104 |
| Copies | : 3000 |
| Printed by | : Patel Graphics, Chennai - 06. |

**Hadiya: Rs. 40/-**

Published by

**DARUL HUDA**

QUALITY ISLAMIC BOOK PUBLISHER

# 211(102), 1st Floor, Linghi Street, Mannady, Chennai-1.

Phone: 044-25247866, 98401 74121

darulhuda.chennai@gmail.com www.darulhuda.net

www.youtube.com/darulhudanet

# பொருளடக்கம்

அளவற்ற அருளாளனும், நிகரற்ற
அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின்
திருப்பெயரால்.....

அல்லாஹ்வே! கிழக்குக்கும் மேற்குக்குமிடையே நீ ஏற்படுத்திய தூரத்தைப்போல் எனக்கும் என் தவறுகளுக்குமிடையே நீ தூரத்தை ஏற்படுத்து! அல்லாஹ்வே! வெண்மையான ஆடை அழுக்கை விட்டு தூய்மைப்படுத்தப்படுவது போல் என் தவறுகளை விட்டு என்னை நீ தூய்மைப்படுத்து! தண்ணீராலும் பனி கட்டியாலும் ஆலங்கட்டியாலும் என் தவறுகளை நீ கழுவு!

(ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

# பதிப்புரை

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! இறையருளும் ஈடேற்றமும் நபி முஹம்மது (ஸல்) அவர்களுக்கும், அவர்களது குடும்பத்தார், தோழர்கள், நல்லோர் அனைவருக்கும் உண்டாகட்டும்.

அல்லாஹ் ஏவியதைச் செய்வதற்கு முக்கியத்துவம் அளிப்பதைப் போன்றே அவன் விலக்கியதிலிருந்து விலகியிருப்பதற்கும் முக்கியத்துவம் அளிக்கப்பட வேண்டும். அல்குர்ஆனைப் பொருளறிந்து படிப்பவர்கள் இதை நன்கு உணர்ந்திருப்பார்கள். சங்கைமிகு குர்ஆனின் பல இடங்களில் அல்லாஹ் தனக்கு மாறு செய்வதை மிக அழுத்தமாகக் கண்டித்துள்ளான். மாறு செய்பவர்களுக்கு நரகத்தின் வேதனை உண்டென எச்சரிக்கை செய்கின்றான். கண்ணிய மிக்க இறைத்தூதர்கள், அல்லாஹ்விற்கும், மறுமைக்கும், நரகத்திற்கும் எவ்வாறு அஞ்சினார்கள் என்று விவரமாக அல்குர்ஆனில் கூறப்பட்டுள்ளது. அவை நமக்குச் சிறந்த படிப்பினைகளாகும்.

அல்குர்ஆனின் வெளிச்சத்திலும், ஆதாரமிக்க நபிமொழிகளின் வெளிச்சத்திலும் நமது சமூகத்தில் பரவி இருக்கும் பல தீமைகளைப் பற்றிய விவரங்கள் இந்நூலில் கொடுக்கப்பட்டுள்ளன. இதற்கு முன் நான்கு முறை இந்நூல் அச்சிடப்பட்டது. இது இந்நூலின் ஐந்தாம் பதிப்பாகும். இந்நூலைத் தமிழாக்கம் செய்வதிலும் பிழை திருத்தம் செய்வதிலும், சீர்படுத்துவதிலும் உதவிய சகோதரர்கள் அனைவருக்கும் குறிப்பாக இந்த ஐந்தாம் பதிப்பை வெளியிடுவதில் என்னுடன் பணியாற்றிய சகோதரர் M.F. அலீ அவர்களுக்கும் அல்லாஹ் உதவி செய்வானாக! அல்லாஹ் இந்நூலின் ஆசிரியர் அவர்களுக்கு உடல் சுகத்தடன் கூடிய நீண்ட வாழ்வை வழங்கி அருள் செய்வானாக! ஆமீன்!!

முழுமையான நிறைவுடையவன் அல்லாஹ் ஒருவன்தான். வாசக அன்பர்கள் எங்களின் இம்முயற்சியில் குறைகள் எதையேனும் கண்ணுற்றால் அவற்றை உடனே எங்களுக்குத் தெரியப்படுத்தி, நன்மையில் பங்கு பெற்றுக் கொள்ளுங்கள்.

அல்லாஹ்வே! எங்களுக்கும் உனது மார்க்கத்தைப் பரப்ப இரவும் பகலும் உழைக்கும் நல்லோர் அனைவருக்கும் உன் அன்பையும் அருளையும் அளவின்றி வழங்கு! சுவனத்தைத் தா! ஆமீன்!

அன்புடன்,

அ. உமர் ஷரீஃப்,
(குர்ஆன் மற்றும் நபிமொழி பணியாளன்)
தாருல் ஹுதா, சென்னை.1

# மதிப்புரை

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அல்லாஹ், தனது தூதர் (ஸல்) அவர்கள் மீதும், அவர்களது குடும்பத்தார், தோழர்கள் மற்றும் நேர்வழியை பின்பற்றிய அனைவர் மீதும் ஸலவாத்தும் ஸலாமும் என்றென்றும் அருள்வானாக!

முஹம்மது இப்னு ஸாலிஹ் அல்முனஜ்ஜிது அவர்களின் 'முஹர்ரமாத் இஸ்தஹான பிஹன்னாஸ் யஜிபுல் ஹத்ரு மின்ஹா' என்ற நூலைப் பார்வையிட்டேன். இதன் ஆசிரியர் இதை மிக அழகிய முறையில் கோர்வை செய்து சமுதாயத்துக்கு நற்பயனளித்துள்ளார்கள். அல்லாஹ், அவர்களுக்கு நற்கூலி அளிப்பானாக! பயனளிக்கும் கல்வியையும், நற்செயல்களையும் வழங்கிடுவானாக!

இந்நூல் வாயிலாகவும், இவர்களது மற்ற நூல்களின் வாயிலாகவும் அல்லாஹ் நற்பலனளிப்பானாக! நிச்சயமாக அல்லாஹ் தூய்மையானவன்; மிகுந்த கொடையளிப்பவன்; மிக்க கண்ணியமானவன்.

நூலாசிரியரின் கோரிக்கைக்கு இணங்க இதை எழுதுகிறேன்.

நமது நபி முஹம்மது (ஸல்) அவர்கள் மீதும், அவர்களது குடும்பத்தார், தோழர்கள் மீதும் அல்லாஹ் ஸலவாத்தும் ஸலாமும் என்றென்றும் அருள்வானாக!

அப்துல் அஜீஸ் இப்னு அப்துல்லாஹ் இப்னு பாஸ்

ஹிஜ்ரி 11.9.1414 தலைமை முஃப்தி சவூதி அரேபியா

# அனுமதிக்கப்பட்டவை,

# தடுக்கப்பட்டவை!

## -ஒரு விளக்கம்

அஷ்ஷைக் முஹம்மது ஸாலிஹ் அல்முனஜ்ஜிது

எல்லாப் புகழும் நன்றியும் அல்லாஹ்வுக்கே உண்டாகட்டும். அவன் ஒருவனையே புகழ்கிறோம். அவனிடமே உதவி தேடுகிறோம். அவனிடமே பாவமன்னிப்புக் கோருகிறோம். அவனிடமே திரும்புகிறோம். நமது மன இச்சைகளின் கெடுதிகள் மற்றும் தீயச் செயல்களை விட்டு அவனிடமே பாதுகாவல் தேடுகிறோம். எவருக்கு அல்லாஹ் நேர்வழி காட்டினானோ அவரை யாரும் வழிதவறச் செய்திட முடியாது. அல்லாஹ் யாரை வழிதவற விட்டுவிட்டானோ அவருக்கு எவரும் நேர்வழி காட்டிட முடியாது.

அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறு யாருமில்லை; அவன் தனித்தவன்; அவனுக்கு யாதொரு இணையுமில்லை என்று சாட்சி கூறுகிறேன். முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் அடிமையாகவும் தூதராகவும் இருக்கிறார்கள் என்றும் சாட்சி கூறுகிறேன். அல்லாஹ்வின் அருளும் ஈடேற்றமும் நபி முஹம்மது (ஸல்) அவர்கள் மீதும் அவர்களது குடும்பத்தார், தோழர்கள் மற்றும் அவர்களை மனத்தூய்மையுடன் பின்தொடர்ந்த அனைவர் மீதும் உலக இறுதி நாள் வரை உண்டாகட்டும்!

நிச்சயமாக அல்லாஹ் தனது அடியார்களுக்குப் பல கடமைகளை விதித்திருக்கின்றான்; அவற்றைப் பாழ்படுத்திடக் கூடாது. பல சட்ட வரம்புகளை நிர்ணயித்துள்ளான்; அவற்றைத் தகர்த்திடக் கூடாது. பல செயல்களை விலக்கியுள்ளான்; அவற்றைச் செய்யக் கூடாது.

قال رسول الله صلى الله عليه وسلم ما أحل الله في كتابه فهو حلال وما
حرم فهو حرام وما سكت عنه فهو عافية فاقبلوا من الله العافية فإن الله
لم يكن لينسى شيئا وتلا وما كان ربك نسيا رواه الحاكم

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "அல்லாஹ் தனது நூலில் எவற்றை ஆகுமாக்கியுள்ளானோ, அவை அனைத்தும் ஆகுமானவை. எவற்றை விலக்கியுள்ளானோ, அவை அனைத்தும்

விலக்கப்பட்டவை. அல்லாஹ் எவற்றைத் தெளிவுபடுத்தாமல் மவுனம் காத்துள்ளானோ, அவை சலுகைகள். எனவே, அச்சலுகைகளை ஏற்றுக் கொள்ளுங்கள். நிச்சயமாக அல்லாஹ் எதையும் மறந்துவிட மாட்டான்" என்று கூறிவிட்டு பின்னர் கீழ்வரும் வசனத்தை ஓதிக் காட்டினார்கள்.

"... உம் இறைவன் மறப்பவனாக இல்லை."

(ஸூரா மர்யம் 19:64) (முஸ்தத்ரகுல் ஹாகிம்)

அல்லாஹ்வால் (ஹராமாக்கப்பட்டு) விலக்கப்பட்டவை அனைத்தும் அவன் நமக்கு விதித்திருக்கிற வரம்புகளாகும்.

تِلْكَ حُدُودُ ٱللَّهِ فَلَا تَقْرَبُوهَا

இவை அல்லாஹ்வுடைய திட்டமான சட்ட வரம்புகள். ஆதலால் அவ்வரம்புகளை (மீற) நீங்கள் நெருங்காதீர்கள். (ஸூரா அல்பகறா 2:187)

அவன் விதித்த வரம்புகளை மீறி, தடுக்கப்பட்ட காரியங்களைச் செய்பவரை அல்லாஹ் வன்மையாகக் கண்டித்துப் பேசுகிறான்.

وَمَن يَعْصِ ٱللَّهَ وَرَسُولَهُ وَيَتَعَدَّ حُدُودَهُ يُدْخِلْهُ نَاراً خَالِداً فِيهَا وَلَهُ

عَذَابٌ مُّهِينٌ

எவன் அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் மாறு செய்து, அவன் ஏற்படுத்திய வரம்புகளை மீறுகிறானோ, அவனை நரகத்தில் புகுத்தி விடுவான். அதிலேயே அவன் (என்றென்றும்) தங்கி விடுவான். இழிவுபடுத்தும் வேதனையும் அவனுக்கு உண்டு.. (ஸூரா அந்நிஸா 4:14)

விலக்கப்பட்டவற்றைத் தவிர்த்துக் கொள்வது கட்டாயமாகும்.

عن أبي هريرة قال قال رسول الله صلى الله عليه وسلم ما نهيتكم عنه

فاجتنبوه وما أمرتكم به فافعلوا منه ما استطعتم (رواه مسلم)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ''நான் உங்களுக்கு தடுத்தவற்றிலிருந்து விலகிக் கொள்ளுங்கள். நான் உங்களுக்கு கட்டளையிட்டதை இயன்றளவு நிறைவேற்றுங்கள்." (ஸஹீஹ் முஸ்லிம்)

குறுகிய அறிவும் பலவீனமான உள்ளமும் கொண்டு மனோ இச்சையைப் பின்பற்றுவோர், தடை செய்யப்பட்ட விஷயங்களைப் பற்றி கேட்கும்போது சலிப்புடன் கூறுகிறார்கள்: "மார்க்கம் இலகுவாக இருந்தும் இந்த அறிஞர்கள் அனைத்தையும் 'ஹராம்' என்று கூறி எங்கள் வாழ்வை நெருக்கடிக்கு உள்ளாக்கி, அதைக் கசப்பாக்கி விட்டார்கள்."

இவர்களுக்கு நாம் கூறுகிறோம்: "நிச்சயமாக அல்லாஹ், தான் நாடியதைச் சட்டமாக்குகிறான்; அவன் மிக நுட்பமாக அறிந்தவனும் ஞானமிக்கவனும் ஆவான். அவன் நாடியதை ஆகுமாக்கவும், நாடியதைத்

தடை செய்யவும் அவன் முழு உரிமை பெற்றவன். நாம் அல்லாஹ்வின் அடிமைகள். எனவே அவனது சட்டங்களை மனமுவந்து எவ்வித ஆட்சேபனையுமின்றி ஏற்று பொருந்திக் கொள்வது கடமையாகும்."

அல்லாஹ்வின் சட்டங்கள் அவனது ஞானம் மற்றும் நீதி நிறைந்தவை. அவை அர்த்தமற்றவையும் அல்ல; வீணானவையும் அல்ல!

وَتَمَّتْ كَلِمَةُ رَبِّكَ صِدْقًا وَعَدْلًا لَّا مُبَدِّلَ لِكَلِمَاتِهِ وَهُوَ السَّمِيعُ الْعَلِيمُ

(நபியே!) உங்களது இறைவனின் வாக்கு உண்மையாகவும், நீதியாகவும் முழுமையாகி விட்டது. அவனுடைய வாக்குகளை மாற்றுபவன் யாருமில்லை. அவன் (யாவற்றையும்) செவியுறுபவனாகவும், நன்கறிந்தவனாகவும் இருக்கின்றான். (ஸூரா அல்அன்ஆம் 6:115)

ஹலால் (அனுமதிக்கப்பட்டவை), ஹராம் (விலக்கப்பட்டவை) ஆகியவற்றின் அடிப்படைக் காரணத்தை அல்லாஹ் மிகத் தெளிவாகத் தனது நூலில் குறிப்பிடுகிறான்:

وَيُحِلُّ لَهُمُ الطَّيِّبَاتِ وَيُحَرِّمُ عَلَيْهِمُ الْخَبَآئِثَ

... (இத்தூதர்) நல்லவற்றையே அவர்களுக்கு ஆகுமாக்கி வைப்பார். தீயவற்றை அவர்களுக்குத் தடுத்து விடுவார்...

(ஸூரா அல்அஃராஃப் 7:157)

இவ்வசனத்திலிருந்து நாம் தெளிவாகத் தெரிந்து கொள்வது என்னவெனில், நல்லவை நமக்கு அனுமதிக்கப்பட்டவையாகும்; கெட்டவை நமக்கு விலக்கப்பட்டவையாகும்.

ஒன்றை ஆகுமாக்குவதும் தடை செய்வதும் அல்லாஹ்வின் சுய அதிகாரத்தில் இருக்கும் உரிமையாகும். எவரேனும் ஒருவர் அந்த உரிமை தமக்கும் இருப்பதாக அல்லது அல்லாஹ் அல்லாத வேறு எவருக்கேனும் இருப்பதாக நம்பினால் அவர் மார்க்கத்திலிருந்து வெளியேறிவிட்ட இறை நிராகரிப்பாளர் (காஃபிர்) ஆவார்.

أَمْ لَهُمْ شُرَكَاءُ شَرَعُوا لَهُم مِّنَ الدِّينِ مَا لَمْ يَأْذَن بِهِ اللَّهُ

அல்லாஹ் அனுமதிக்காத எதனையும் அவர்களுக்கு மார்க்கமாக்கி வைக்கக்கூடிய தெய்வங்களும் அவர்களுக்கு இருக்கின்றனவா?....

(ஸூரா அஷ்ஷூறா 42:21)

ஹலால், ஹராமைப் பற்றி பேசுவது, அல்லாஹ்வின் குர்ஆனையும் நபிவழியையும் நன்கறிந்தவருக்கு மட்டுமே அனுமதிக்கப்பட்டதாகும். ஒன்றைப் பற்றி உறுதியாகத் தெரிந்து கொள்ளாமல் அதை ஹலால், ஹராம்

என்று கூறுபவர் அல்குர்ஆனின் கடும் கண்டனத்திற்கு உரியவராவார்.

وَلَا تَقُولُوا۟ لِمَا تَصِفُ أَلْسِنَتُكُمُ ٱلْكَذِبَ هَـٰذَا حَلَـٰلٌ وَهَـٰذَا حَرَامٌ لِّتَفْتَرُوا۟ عَلَى ٱللَّهِ ٱلْكَذِبَ إِنَّ ٱلَّذِينَ يَفْتَرُونَ عَلَى ٱللَّهِ ٱلْكَذِبَ لَا يُفْلِحُونَ

உங்கள் நாவில் வந்தவாறெல்லாம் (எதைப் பற்றியும் மார்க்கத்தில்) இது ஆகும்; அது ஆகாது என்று பொய் கூறாதீர்கள். அவ்வாறு கூறினால் அது அல்லாஹ்வின் மீது அபாண்டமாகப் பொய் கூறுவதாகும். எவர்கள் அல்லாஹ்வின் மீதே பொய்யைக் கற்பனை செய்கிறார்களோ அவர்கள் நிச்சயமாக வெற்றி அடையவே மாட்டார்கள். (ஸூரா அந்நஹ்ல் 16:116)

உறுதியாகத் தடுக்கப்பட்டவை அல்குர்ஆனிலும் நபிமொழிகளிலும் கூறப்பட்டுள்ளன. உதாரணமாக,

قُلْ تَعَالَوْا۟ أَتْلُ مَا حَرَّمَ رَبُّكُمْ عَلَيْكُمْ أَلَّا تُشْرِكُوا۟ بِهِۦ شَيْـًٔا وَبِٱلْوَٰلِدَيْنِ إِحْسَـٰنًا وَلَا تَقْتُلُوٓا۟ أَوْلَـٰدَكُم مِّنْ إِمْلَـٰقٍ...

(நபியே! அவர்களை நோக்கி) நீங்கள் கூறுங்கள்: வாருங்கள்! உங்கள் இறைவன் உங்களுக்கு தடுப்பவற்றை(யும் ஏவியிருப்பவற்றையும்) நான் உங்களுக்கு ஓதிக் காண்பிக்கிறேன். (அவையாவன:) அவனுக்கு யாதொன்றையும் நீங்கள் இணையாக்காதீர்கள். (உங்கள்) தாய், தந்தையுடன் மிக அழகிய முறையில் நடந்து கொள்ளுங்கள். வறுமைக்குப் பயந்து உங்கள் பிள்ளைகளை நீங்கள் கொலை செய்யாதீர்கள்...

(ஸூரா அல்அன்ஆம் 6:151)

இதுபோல் நபிமொழிகளிலும் கட்டளைகள் வந்துள்ளன.

قال رسول الله صلى الله عليه وسلم إن الله حرم بيع الخمر والميتة والخنزير والأصنام (رواه أبوداود)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "நிச்சயமாக அல்லாஹ் மது, செத்த பிராணிகள், பன்றி மற்றும் சிலைகள் ஆகியவற்றின் வியாபாரத்தை (ஹராம் என்று) தடை செய்திருக்கிறான்." (ஸுனன் அபூதாவூது)

قال رسول الله صلى الله عليه وسلم إن الله إذا حرم شيئا حرم ثمنه

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "நிச்சயமாக அல்லாஹ் ஒரு பொருளை ஹராமாக்கினால் அதன் (மூலம் கிடைக்கும்) கிரயத்தையும் ஹராமாக்கி விடுகிறான்." (ஸுனன் தாரகுத்னீ)

அல்லாஹ் சில வசனங்களில் குறிப்பிட்ட வகையைச் சேர்ந்த தடுக்கப்பட்ட சிலவற்றைக் குறிப்பிடுகிறான். உதாரணமாக, சாப்பிட

அனுமதிக்கப்படாதவை பற்றி பின்வரும் வசனத்தில் கூறுகின்றான்.

حُرِّمَتْ عَلَيْكُمُ ٱلْمَيْتَةُ وَٱلدَّمُ وَلَحْمُ ٱلْخِنْزِيرِ وَمَآ أُهِلَّ لِغَيْرِ ٱللَّهِ بِهِ وَٱلْمُنْخَنِقَةُ وَٱلْمَوْقُوذَةُ وَٱلْمُتَرَدِّيَةُ وَٱلنَّطِيحَةُ وَمَآ أَكَلَ ٱلسَّبُعُ إِلاَّ مَا ذَكَّيْتُمْ وَمَا ذُبِحَ عَلَى ٱلنُّصُبِ وَأَنْ تَسْتَقْسِمُواْ بِٱلأَزْلاَمِ ذَٰلِكُمْ فِسْقٌ

(நம்பிக்கையாளர்களே! தானாக) செத்தது, இரத்தம், பன்றி இறைச்சி, அல்லாஹ் அல்லாதவற்றின் பெயர் கூறப்பட்டவை ஆகியவையும், அடிப்பட்டுச் செத்ததும், (மேலிருந்து) விழுந்து செத்ததும், கழுத்து நெருக்கிச் செத்ததும், கொம்பால் குத்தப்பட்டுச் செத்ததும், (சிங்கப் பல்லும், வீர நகமும் உள்ள மாமிசம் தின்னும் மிருகங்களாகிய சிங்கம், புலி, சிறுத்தை போன்ற) ஐவாய் மிருகங்கள் கடித்(துச் செத்)தவையும் உங்களுக்கு விலக்கப்பட்டிக்கின்றன. (எனினும், இம்மிருகங்கள் வேட்டையாடிய) அவற்றில் (உயிரோடிருப்பவற்றில்) முறைப்படி (பிஸ்மில்லாஹ் சொல்லி) அறுக்கப்பட்டவற்றைத் தவிர. (அவ்வாறு அறுக்கப்பட்டவற்றைப் புசிக்கலாம். பூஜை செய்வதற்காக) நடப்பட்ட (கொடிக்கம்பம், பஞ்சா, சிலை போன்ற)வற்றுக்காக அறுக்கப்பட்டவையும், அம்பு எய்து (குறி கேட்டுப்) பாகம் பிரித்துக் கொள்வதும் (உங்களுக்கு விலக்கப்பட்டிருக்கின்றன.)...

(ஸூரா அல்மாயிதா 5:3)

திருமணம் செய்து கொள்ள விலக்கப்பட்ட பெண்களைப் பற்றி பின்வரும் வசனத்தில் அல்லாஹ் தெளிவுபடுத்துகிறான்.

حُرِّمَتْ عَلَيْكُمْ أُمَّهَاتُكُمْ وَبَنَاتُكُمْ وَأَخَوَاتُكُمْ وَعَمَّاتُكُمْ وَخَالاَتُكُمْ وَبَنَاتُ ٱلأَخِ وَبَنَاتُ ٱلأُخْتِ وَأُمَّهَاتُكُمُ اللاَّتِي أَرْضَعْنَكُمْ وَأَخَوَاتُكُم مِّنَ ٱلرَّضَاعَةِ وَأُمَّهَاتُ نِسَآئِكُمْ

உங்கள் தாய்களும், உங்கள் பெண் மக்களும், உங்கள் சகோதரிகளும், உங்கள் தகப்பனின் சகோதரிகளும், உங்கள் தாயின் சகோதரிகளும், உங்கள் சகோதரனின் பெண் மக்களும், உங்கள் சகோதரியின் பெண் மக்களும், உங்களுக்குப் பாலூட்டிய செவிலித் தாய்களும், பால்குடி சகோதரிகளும் உங்கள் மனைவியின் தாய்களும் (ஆகிய இவர்களை நீங்கள் மண முடித்துக் கொள்வது) உங்களுக்கு விலக்கப்பட்டுள்ளது...

(ஸூரா அன்னிஸா 4:23)

தடை செய்யப்பட்ட வியாபாரங்களைப் பற்றியும் அல்லாஹ் குறிப்பிடுகிறான்:

وَأَحَلَّ ٱللَّهُ ٱلْبَيْعَ وَحَرَّمَ ٱلرِّبَا

அல்லாஹ் வணிகத்தை ஆகுமாக்கி வட்டியைத் தடுத்து (ஹராமாக்கி) விட்டான்... (ஸூரா அல்பகறா 2:275)

நிச்சயமாக அல்லாஹ் தனது அடியார்கள் மீது நிகரற்ற அன்புடையவன். ஏராளமான நல்லவற்றை நமக்கு ஆகுமாக்கி வைத்துள்ளான். எனவேதான் ஆகுமாக்கப்பட்டவையின் விவரங்கள் நமக்குக் கூறப்படவில்லை. தடை செய்யப்பட்டவை குறிப்பிட்ட சில விசயங்கள்தாம். அவற்றை நாம் விளங்கிக் கொள்வதற்காக அவை அனைத்தும் கூறப்பட்டுவிட்டன.

அல்குர்ஆன் கூறுகிறது:

وَقَدْ فَصَّلَ لَكُمْ مَّا حَرَّمَ عَلَيْكُمْ إِلاَّ مَا ٱضْطُرِرْتُمْ إِلَيْهِ

நீங்கள் நிர்ப்பந்திக்கப்பட்டாலே தவிர (உண்ண) உங்களுக்குத் தடுக்கப்பட்டவை எவையென அவன் உங்களுக்கு விவரித்துக் கூறியிருக்கிறான்... (ஸூரா அல்அன்ஆம் 6:119)

ஆகுமானவை பற்றி அல்லாஹ் குறிப்பிடுகின்றான்:

يَآأَيُّهَا ٱلنَّاسُ كُلُواْ مِمَّا فِي ٱلأَرْضِ حَلاَلاً طَيِّباً

''மனிதர்களே! பூமியிலுள்ளவற்றில் (உண்ண உங்களுக்கு) அனுமதிக்கப்பட்ட பரிசுத்தமானவற்றையே உண்ணுங்கள்..."

(ஸூரா அல்பகறா 2:167)

இவ்வசனத்தின் மூலம் நல்லவை அனைத்தும் ஆகுமானவையே என்பதை விளங்கிக் கொள்ளலாம்.

பொதுவாக 'ஹராம்' என்பதற்கான ஆதாரம் இல்லாத வரை எதையும் ஹலால் என்றே நாம் ஏற்க வேண்டும். இது அல்லாஹ் நமக்குச் செய்த கருணையும் மகத்தான உபகாரமும் ஆகும். இதற்காக நாம் அல்லாஹ்வுக்குப் பெரிதும் நன்றி செலுத்த வேண்டும்.

மார்க்கத்தை விளங்கிக் கொள்ளாத சிலர் ஹராம் உடைய வகைகளைப் பார்க்கும்போது மனச்சங்கடத்திற்கு ஆளாகிறார்கள். ஹலால் உடைய வகைகளை எண்ணிக் கூறினால் மட்டும் மார்க்கம் இலகுவானது என்று இவர்கள் ஒப்புக் கொள்வார்களா என்ன? ஆகுமாக்கப்பட்ட நல்ல உணவு வகைகளின் பட்டியல் இவர்களுக்கு விவரிக்கப்பட்டால் மார்க்கம் தங்கள் வாழ்க்கையை கசப்பாக்கிவிடவில்லை என்று நிம்மதி பெறுவார்களா என்ன?

உதாரணமாக ஹலால்களைப் பட்டியலிட்டு,

பிஸ்மில்லாஹ் கூறி அறுக்கப்பட்ட ஒட்டகம், மாடு, ஆடு, மான்,

வான்கோழி, கோழி, புறா, வாத்து, அன்னப் பறவை, தீக்கோழி ஆகியவற்றின் இறைச்சியும் செத்த மீனும், வெட்டுக்கிளியும் ஹலால் என விவரமாகக் கூறப்பட வேண்டுமென அவர்கள் எதிர்பார்க்கிறார்களா? இதுபோன்றே காய்கறிகள், கீரைகள், பழங்கள், தானியங்கள், பருப்பு வகைகள் ஹலால்.

உப்பு, மிளகாய், மசாலாப் பொருட்கள் ஹலால்.

மரங்கள், கட்டை, இரும்பு, கல், மண், கண்ணாடி, பிளாஸ்டிக், இரப்பர் ஆகியவற்றைப் பயன்படுத்துவது ஹலால்.

கால்நடைகள், வாகனங்கள், ரயில், கப்பல், விமானம் போன்றவற்றில் பிரயாணம் செய்வது ஹலால்.

குளிர் சாதனக் கருவிகள், குளிர் சாதனப் பெட்டி, துணி துவைக்கும் இயந்திரம், உலர்த்தும் கருவி, அரவை இயந்திரம், சாறு (ஜூஸ்) பிழியும் கருவிகள், பலவகையான மருத்துவ, பொறியியல், கணிதவியல் கருவிகள், ரேடார்கள், கட்டடக் கருவிகள், நீரிறைக்கும் இயந்திரம், பெட்ரோல் மற்றும் சுரங்கங்களில் பயன்படுத்தும் கருவிகள், அச்சு இயந்திரங்கள், கணிப்பொறி ஆகியவை ஹலால்.

பருத்தி (காட்டன்), பாலியஸ்டர், நைலான், கம்பளி ஆடைகளை அணிவது ஹலால்.

திருமணம், கொடுக்கல், வாங்கல், வாடகைக்கு விடுதல், செப்பனிடுதல், தச்சுத் தொழில்கள் ஹலால்.

இப்படி வரிசையாகப் பட்டியலிட வேண்டுமென விரும்புகிறார்களா? இப்படி பட்டியலிடத்தான் முடியுமா? இதை இம்மக்கள் புரிந்து கொள்ள வேண்டாமா?

அவர்கள் மார்க்கம் இலகுவானது என்று கூறுவது உண்மைதான். ஆனால் இவர்கள் அந்த உண்மையைத் தவறாக விளங்கிக் கொண்டார்கள். இலகுவானது என்பது மக்களின் மனோ இச்சைக்கு ஏற்பவும், விருப்பங்களுக்கு ஏற்பவும் அமைந்திருப்பது என்று பொருளல்ல; மாறாக, மார்க்கம் கூறியிருக்கும் முறையில்தான் 'இலகு' இருக்கிறது எனப் பொருள்.

மார்க்கம் 'இலகுவானது' என்று கூறி தடை செய்யப்பட்டவற்றைச் செய்வதற்கும், மார்க்கம் அனுமதித்தவற்றைச் செய்வதற்குமிடையே பெரிய வேறுபாடுண்டு. உதாரணமாக, பயணத்தில் தொழுகையைச் சுருக்கித் தொழலாம்; நோன்பை விட்டு விடலாம்; காலுறை அணிந்திருக்கும்போது உள்ளூரிலிருப்பவர் ஒரு நாளும் பயணத்திலிருப்பவர் மூன்று நாட்களும் அக்காலுறையின் மீதே 'மஸஹ்' தண்ணீர்பட்ட கையால் தடவிக்

கொள்ளலாம்; பயணம் அல்லது கடின மழை, நோய் போன்ற சந்தர்ப்பங்களில் இரண்டு வேளைத் தொழுகைகளைச் சேர்த்துத் தொழலாம், மணமுடிக்க விரும்பும் பெண்ணை பார்த்துக் கொள்வதற்கான அனுமதி, சத்தியத்தை முறித்துவிடும்போது குற்றப் பரிகாரமாக அடிமையை உரிமையிடல் அல்லது உணவளித்தல் அல்லது ஏழைகளுக்கு ஆடைகளைத் தர்மம் செய்தல் ஆகிய இம்மூன்றில் ஒன்றைத் தேர்ந்தெடுக்கும் சலுகை, நிர்ப்பந்த நேரத்தில் இறந்த பிராணிகளையும் உண்பதற்கான அனுமதி என நமக்கு பல்வேறு சலுகைகள் அளிக்கப்பட்டுள்ளன. இவ்வாறான சலுகைகள்தாம் மார்க்கம் எளிதானது என்பதன் பொருளாகும்.

மார்க்கம் இலகுவானது என்பதன் பொருள் நம் மனோ இச்சையின் விருப்பத்திற்கேற்ப அமைந்துள்ளது என்பதல்ல. இதுமட்டுமின்றி அல்லாஹ் சில பொருட்களை ஹராமாக்கியிருப்பதில் பல நுட்பங்கள் இருப்பதை முஸ்லிம்கள் உறுதியாக நம்ப வேண்டும்.

உதாரணமாக அல்லாஹ் சில விஷயங்களைச் செய்யக் கூடாதென தன் அடியார்களைத் தடுத்து, அவர்கள் எவ்வாறு செயல்படுகிறார்கள் என்பதைச் சோதிக்கிறான். இன்னும் சுவர்க்கவாசிகள் யார், நரகவாசிகள் யாரென்பதையும் இதன் மூலம் சோதிக்கிறான். நரகவாசிகள் மனோ இச்சைகளையே பின்பற்றுவார்கள். நரகம் இச்சைகளைக் கொண்டே சூழப்பட்டிருக்கிறது. சுவர்க்கவாசிகள் மனத்திற்குச் சிரமமானதைப் பொறுமையுடன் சகித்துக் கொள்கிறார்கள். சுவர்க்கம் சிரமமானவற்றைக் கொண்டே சூழப்பட்டுள்ளது.

இறைநம்பிக்கையாளர்கள் அல்லாஹ்வின் கட்டளைகளில் உள்ள சிரமத்தை நன்மையின் பார்வையுடனும் அல்லாஹ்வின் திருப்தியை வேண்டி கீழ்ப்படிதலின் கண்ணோட்டத்துடனும் அணுகுவதால் அவர்களுக்குச் சிரமங்களெல்லாம் இலகுவாகி விடுகின்றன.

நயவஞ்சகர்கள் இறைக்கட்டளைகளில் உள்ள சிரமங்களை வேதனை மற்றும் இழப்பின் கண்ணோட்டத்தில் பார்ப்பதால் அவை அவர்களுக்கு செயல்படுத்த இயலாத கடினமானவையாகத் தென்படுகின்றன.

தடுக்கப்பட்டவற்றை அல்லாஹ்வுக்காக விடுவதன் மூலமே அடியான் அல்லாஹ்வின் புறத்திலிருந்து அதை விடச் சிறந்ததை பகரமாகப் பெறுகிறான்; இறைநம்பிக்கையின் இன்பத்தையும் உள்ளத்தில் உணர்கிறான்.

இச்சிறு நூலில், ஹராமான சிலவற்றைப் பற்றி அல்குர்ஆன், அல்ஹதீஸ் ஆதாரங்களுடன் வாசகர்கள் அறிந்து கொள்ள முடியும். பெரும்பாலான முஸ்லிம் களிடையே பரவி நிற்கும் தீமைகளைப் பற்றியே

இந்நூலில் குறிப்பிடுகிறேன். இதன் மூலம் மக்கள் மார்க்கத் தெளிவும் நல்லுபதேசமும் பெற வேண்டுமென விரும்புகிறேன்.

அல்லாஹ்வே! எனக்கும் எனது முஸ்லிம் சகோதரர்களுக்கும் நேர்வழியையும் நீ அமைத்த வரம்புகளைப் பேணி நடக்கும் நல்லருளையும் உன்னிடம் இறைஞ்சுகிறேன். அல்லாஹ்வே சிறந்த பாதுகாவலன்; அவனே கருணையாளர்களிலெல்லாம் மகத்தான கருணையாளன்.



## 1. ஷிர்க் - அல்லாஹ்வுக்கு இணைவைப்பது

அல்லாஹ்வுக்கு இணை வைப்பது பாவங்களிலெல்லாம் மிகப் பெரிய பாவமாகும்.

عن أبي بكرة رضي الله عنه قال كنا عند رسول الله صلى الله عليه وسلم

فقال ألا أنبئكم بأكبر الكبائر ثلاثا قالوا قلنا بلى يارسول الله قال

الإشراك بالله رواه البخاري ومسلم

நபி (ஸல்) அவர்கள் (தங்கள் தோழர்களை நோக்கி): "பெரும்பாவங்களிலெல்லாம் மிகப் பெரிய பாவத்தை உங்களுக்கு நான் அறிவித்துத் தரட்டுமா?" என மூன்று முறை வினவினார்கள். அதற்கு நாங்கள், "ஆம்! அறிவியுங்கள் அல்லாஹ்வின் தூதரே!" என்று கூறினோம். அப்போது நபி (ஸல்) அவர்கள் "அல்லாஹ்வுக்கு இணை வைப்பதுதான் (அந்தப் பெரும் பாவமாகும்)" என்று கூறினார்கள்.

(ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

ஓர் அடியான் அல்லாஹ்வை நம்பிக்கை கொண்ட நிலையில் ஏதேனும் பெரும்பாவங்களைச் செய்துவிட்டால், அப்பாவங்களை அல்லாஹ் தான் நாடினால் 'தவ்பா' (பாவமீட்சி) இல்லாமலும் மன்னித்து விடுவான். ஆனால் 'ஷிர்க் - இணை வைத்தல்' என்ற பாவத்தை மட்டும் பாவமன்னிப்பு (தவ்பா) தேடாத வரை அவன் மன்னிப்பதே இல்லை.

அல்லாஹ் கூறுகின்றான்:

إِنَّ ٱللَّهَ لَا يَغْفِرُ أَن يُشْرَكَ بِهِۦ وَيَغْفِرُ مَا دُونَ ذَٰلِكَ لِمَن يَشَآءُ

நிச்சயமாக அல்லாஹ், தனக்கு இணைவைக்கப்படுவதை மன்னிக்கவே மாட்டான். இதனைத் தவிர (மற்ற) எதனையும் தான் நாடியோருக்கு மன்னிப்பான்... (ஸூராஅந்நிஸா 4:48)

'ஷிர்க்' (இணை வைத்தல்) எனும் பெரும்பாவத்தைச் செய்தவர் இஸ்லாமிய மார்க்கத்தை விட்டே வெளியேறியவராவார். அவர் அதற்காகப் பாவமன்னிப்பு தேடாமல் இறந்துவிட்டால் என்றென்றும் நிரந்தரமாக நரகில் தள்ளப்படுவார். முஸ்லிம்களிடையே இதுபோன்ற பல 'ஷிர்க்'கள் காணப்படுகின்றன. அவற்றில் சிலவற்றை இங்கு நாம் காண்போம்.

## 2. அடக்கத்தலங்களை வணங்குவது 'ஷிர்க்'

இறந்துவிட்ட இறைநேசர்களால் நமது தேவைகளை நிறைவேற்றவோ, சிரமங்களை நீக்கவோ முடியும் என்று நம்புவது, அவர்களிடம் உதவி கோரி பிரார்த்திப்பது, பாதுகாப்புத் தேடுவது போன்ற செயல்கள் அனைத்தும் 'ஷிர்க்' ஆகும்.

ஏனென்றால், இவ்வகையான செயல்கள் அனைத்தும் மார்க்கத்தில் வணக்க வழிபாடுகளாகக் கருதப்படுகின்றன. வணக்க வழிபாடுகளை அல்லாஹ் தனக்கு மட்டுமே செய்ய வேண்டுமென அல்குர்ஆனின் பல வசனங்களில் தெளிவாகக் கட்டளையிடுகின்றான்.

وَقَضَىٰ رَبُّكَ أَلاَّ تَعْبُدُوٓاْ إِلاَّ إِيَّاهُ

(நபியே!) உங்களது இறைவன் தன்னைத் தவிர (மற்றெவரையும்) வணங்கக் கூடாதென்று கட்டளையிடுகிறான்... (ஸூரா பனீஇஸ்ராயீல் 17:23)

وَمَآ أُمِرُوٓاْ إِلاَّ لِيَعْبُدُواْ ٱللَّهَ مُخْلِصِينَ لَهُ ٱلدِّينَ حُنَفَآءَ

"அவர்கள் அல்லாஹ்வை வணங்க வேண்டும்; வழிபாடுகளை அவனுக்கு மட்டும் கலப்பற்றதாக ஆக்க வேண்டும்; இணை வைத்தலை விட்டு விலகி இருக்க வேண்டும்" என்றுதாம் அவர்களுக்குக் கட்டளையிடப்பட்டுள்ளது. (ஸூரா அல்பய்யினா 98 : 5)

அல்லாஹ்வின் தூதர்களையோ, (அவ்லியாக்கள்) இறைநேசர்களையோ சிபாரிசுக்காக அழைப்பதும் துன்பங்களிலிருந்து விடுதலை பெற அவர்களிடம் பிரார்த்திப்பதும் 'ஷிர்க்' ஆகும்.

أَمَّن يُجِيبُ ٱلْمُضْطَرَّ إِذَا دَعَاهُ وَيَكْشِفُ ٱلسُّوٓءَ وَيَجْعَلُكُمْ خُلَفَآءَ ٱلأَرْضِ

(துன்பத்தில் சிக்கித்) துடிதுடித்துக் கொண்டிருப்பவர்கள் அபயமிட்டு அழைத்தால், அவர்களுக்குப் பதில் கூறி, அவர்களுடைய துன்பங்களை நீக்குபவன் யார்? பூமியில் உங்களை(த் தன்னுடைய) பிரதிநிதிகளாக ஆக்கி வைத்தவன் யார்? (இத்தகைய) அல்லாஹ்வுடன் வணக்கத்திற்குரிய வேறோர் இறைவன் இருக்கின்றானா?... (ஸூரா அந்நம்ல் 27:62)

قُل لِّلَّهِ ٱلشَّفَٰعَةُ جَمِيعاً

(நபியே! நீங்கள் கூறுங்கள்:) சிபாரிசு அனைத்தும் அல்லாஹ்வுக்கே சொந்தமானது. (ஸூரா அஸ்ஸுமர் 39:44)

مَن ذَا ٱلَّذِي يَشْفَعُ عِنْدَهُ إِلاَّ بِإِذْنِهِ

அவனுடைய அனுமதியின்றி அவனிடத்தில் (எவருக்காகிலும்) யார்தாம் பரிந்துப் பேச முடியும்?... (ஸூரா அல்பகறா 2:255)

சிலர் உட்காரும்போதும், எழும்போதும், ஏதேனும் திடுக்கம் ஏற்படும் போதும், துன்பம் ஏற்படும் போதும் அல்லாஹ் அல்லாதவர்களை அழைத்து முறையிடுவதை வழக்கமாகக் கொண்டிருக்கிறார்கள்.

உதாரணமாக: "யா முஹம்மது, யா அலீ, யா ஹுஸைன், யா ஜீலானி, யா ஷாதுலி, யா ரிஃபாயீ, யா முஹ்யித்தீன், யா கௌஸ், யா காஜா, யா

ஷாஹுல் ஹமீது, யா கரீப் நவாஸ், யா காதர்வலீ" என்றெல்லாம் அழைக்கிறார்கள். இவ்வாறு அழைப்பது 'ஷிர்க்' ஆகும். இதைக் கண்டித்து அல்லாஹ் கூறுகிறான்:

إِنَّ ٱلَّذِينَ تَدْعُونَ مِن دُونِ ٱللَّهِ عِبَادٌ أَمْثَالُكُمْ فَٱدْعُوهُمْ فَلْيَسْتَجِيبُواْ لَكُمْ إِن كُنتُمْ صَادِقِينَ

நிச்சயமாக அல்லாஹ்வையன்றி எவர்களை நீங்கள் (இறைவனென) அழைக்கின்றீர்களோ அவர்கள் உங்களைப் போன்ற அடியார்களே! (உங்கள் கோரிக்கைகளை அவர்கள் நிறைவேற்றுகிறார்கள் என்று கூறுவதில்) நீங்கள் உண்மை சொல்பவர்களாக இருந்தால் அவர்களை நீங்கள் அழைத்துப் பாருங்கள்; உங்களுக்கு அவர்கள் பதிலளிக்கட்டும். (ஸூரா அல்அஃராஃப் 7:194)

لَهُ دَعْوَةُ ٱلْحَقِّ وَٱلَّذِينَ يَدْعُونَ مِن دُونِهِ لاَ يَسْتَجِيبُونَ لَهُم بِشَيْءٍ إِلاَّ كَبَاسِطِ كَفَّيْهِ إِلَى ٱلْمَآءِ لِيَبْلُغَ فَاهُ وَمَا هُوَ بِبَالِغِهِ وَمَا دُعَآءُ ٱلْكَافِرِينَ إِلاَّ فِي ضَلاَلٍ

(நாம் பிரார்த்தனை செய்து) உண்மையாக அழைக்கத் தகுதியுடையவன் அவனே. எவர்கள் அவனையன்றி (மற்றவர்களைப் பிரார்த்தனை செய்து) அழைக்கின்றார்களோ அவர்களுக்கு, அவை யாதொன்றையும் கொடுத்து விடாது. (அல்லாஹ்வையன்றி மற்றவற்றை அழைப்பவர்களின் உதாரணம்:) தண்ணீர் (தானாகவே) தன் வாயில் சென்றுவிட வேண்டுமென்று கருதி, தன் இரு கைகளையும் (நீட்டி அள்ளிக் குடிக்காமல்) விரித்துக்கொண்டே இருப்பவனைப் போல் இருக்கிறது. (அதனை அவன் தன் கையைக் கொண்டு அள்ளிக் குடிக்கும் வரையில் அவனுடைய) வாயை அது அடைந்துவிடாது. (அல்லாஹ்வைத் தவிர்த்து மற்றவர்களிடம்) நிராகரிப்பவர்கள் செய்யும் பிரார்த்தனை (இத்தகைய) வழிகேடாகவே இருக்கிறது. (ஸூரா அர்ரஅது 13 : 14)

அடக்கத்தலத்தை (கப்ரை) வணங்கும் சிலர் அதைச் சுற்றி வலம் வருகிறார்கள். அங்குள்ள தூண்களையும் சுவர்களையும் தொட்டுத் தடவுகிறார்கள்; முத்தமிடுகிறார்கள்; அதன் மண்ணை எடுத்துப் பூசிக் கொள்கிறார்கள்; ஸஜ்தா செய்கிறார்கள்; அங்குப் பயத்துடனும் பணிவுடனும் நிற்கிறார்கள். தங்கள் தேவையை முறையிட்டு, அதை நிறைவேற்றும்படி கோருகிறார்கள்.

சிலர் உடல் நலத்தையும் குழந்தைப் பாக்கியத்தையும் கோருகிறார்கள். சிலர் "யா ஸய்யிதீ! தொலைவான ஊரிலிருந்து உங்களை நாடி வந்துள்ளேன். என்னை நிராசையாக்கி விடாதீர்கள்!" என்றெல்லாம்

கூறுகிறார்கள்.

இவர்களைக் கண்டித்தே அல்லாஹ் பின்வரும் வசனத்தில் கூறுகிறான்.

وَمَنْ أَضَلُّ مِمَّن يَدْعُو مِن دُونِ ٱللَّهِ مَن لاَّ يَسْتَجِيبُ لَهُ إِلَىٰ يَوْمِ ٱلْقِيَامَةِ
وَهُمْ عَن دُعَآئِهِمْ غَافِلُونَ

மறுமை நாள் வரையில் (அழைத்த போதிலும்) அவை இவர்களுக்கு பதில் கொடுக்காது. ஆகவே, (இத்தகைய) அல்லாஹ் அல்லாதவற்றை அழைப்பவர்களைவிட வழிகெட்டவர்கள் யார்? தங்களை இவர்கள் அழைப்பதையே அவை அறியாது. (ஸூரா அல்அஹ்காஃப் 46:5)

قال رسول الله صلى الله عليه وسلم من مات وهو يدعو من دون الله ندا
دخل النار رواه البخاري

நபி (ஸல்) அவர்கள் கூறுகிறார்கள்: "யார் அல்லாஹ்வைத் தவிர்த்து வேறொன்றை (அவனுக்கு) நிகராக ஆக்கி அதனிடம் பிரார்த்தித்த நிலையில் மரணிக்கிறாரோ அவர் நரகத்தில் நுழைவார்."

(ஸஹீஹுல் புகாரி)

சிலர் கப்ருகளுக்குச் சென்று அங்கு அடங்கியிருப்போருக்காக மொட்டையடித்துக் கொள்கிறார்கள். சிலர் நன்மையை நாடி கப்ருகள், தர்காக்களுக்குப் பயணம் மேற்கொள்கிறார்கள். மற்றும் சிலர் இறைநேசர்கள் இவ்வுலகில் ஆதிக்கம் செலுத்தி, உலகின் இயக்கத்தில் பங்கு கொள்வதாகவும், அவர்களால் நன்மை, தீமை அளிக்க முடியும் என்றும் நம்புகிறார்கள்.

இவர்களைக் கண்டித்து அல்லாஹ் கூறுகிறான்:

وَإِن يَمْسَسْكَ ٱللَّهُ بِضُرٍّ فَلاَ كَاشِفَ لَهُ إِلاَّ هُوَ وَإِن يُرِدْكَ بِخَيْرٍ فَلاَ رَآدَّ لِفَضْلِه

அல்லாஹ் உமக்கு யாதொரு தீங்கிழைக்கும் பட்சத்தில் அதனை நீக்க அவனைத் தவிர மற்றெவராலும் முடியாது. அவன் உமக்கு யாதொரு நன்மையை நாடினால், அவனுடைய அக்கருணையைத் தடை செய்ய எவராலும் முடியாது.... (ஸூரா யூனுஸ் 10:107)

## 3. அல்லாஹ் அல்லாதவைக்கு நேர்ச்சை செய்வது 'ஷிர்க்'

சிலர் "கப்ருகளுக்கு விளக்கேற்றுகிறோம்; பத்தி கொளுத்துகிறோம்; காணிக்கை செலுத்துகிறோம்" என்றெல்லாம் நேர்ச்சை செய்து கொள்கிறார்கள். நேர்ச்சை என்பது அல்லாஹ்வுக்கு மட்டுமே உரிய வணக்கமாகும். அதை அவனுக்கே செய்ய வேண்டும்.

நேர்ச்சையும் வணக்கமே என்பதற்குப் பின்வரும் வசனங்கள் சான்றளிக்கின்றன. (சுவர்க்கவாசிகளைப் பற்றி கூறுகிற ஓர் இடத்தில் அவர்களின் பண்புகளாக அல்லாஹ் கீழ்வருமாறு கூறுகின்றான்:)

يُوفُونَ بِالنَّذْرِ وَيَخَافُونَ يَوْماً كَانَ شَرُّهُ مُسْتَطِيراً وَيُطْعِمُونَ الطَّعَامَ عَلَىٰ حُبِّهِ مِسْكِيناً وَيَتِيماً وَأَسِيراً

இவர்கள் (தங்கள்) நேர்ச்சைகளையும் நிறைவேற்றுவார்கள். நீண்ட வேதனையுடைய (மறுமை) நாளுக்கும் பயப்படுவார்கள். அன்றி, அல்லாஹ்வின் மீதுள்ள அன்பின் காரணமாக ஏழைகளுக்கும், அனாதைகளுக்கும், சிறைவாசிகளுக்கும் உணவளிப்பார்கள்.

(ஸூரா அத்தஹ்ர் 76:7,8)

وَمَآ أَنفَقْتُم مِّن نَّفَقَةٍ أَوْ نَذَرْتُم مِّن نَّذْرٍ فَإِنَّ ٱللَّهَ يَعْلَمُهُ وَمَا لِلظَّالِمِينَ مِنْ أَنْصَارٍ

(நன்மைக்காக உங்கள்) பொருளிலிருந்து நீங்கள் எதைச் செலவு செய்தபோதிலும், அல்லது நீங்கள் எதை நேர்ச்சை செய்தபோதிலும், நிச்சயமாக அல்லாஹ் அதனை நன்கறிகின்றான். தவிர, (நேர்ச்சை செய்த பின், அதை நிறைவேற்றாத) அக்கிரமக்காரர்களுக்கு உதவி செய்பவர்கள் (ஒருவருமே) இல்லை. (ஸூரா அல்பகறா 2:270)

## 4. அல்லாஹ் அல்லாதவற்றிற்கு அறுத்துப் பலியிடுவது 'ஷிர்க்'

சங்கைமிகு குர்ஆனில் அல்லாஹ் கூறுகின்றான்:

فَصَلِّ لِرَبِّكَ وَٱنْحَرْ

நீங்கள் உங்களது இறைவனுக்காகவே தொழுங்கள் மேலும் குர்பானி (பலி) கொடுத்து வாருங்கள். (ஸூரா அல்கவ்ஸர் 108:2)

قال رسول الله صلى الله عليه وسلم لعن الله من ذبح لغير الله

நபி (ஸல்) அவர்கள் கூறுகிறார்கள்: "அல்லாஹ் அல்லாதவற்றிற்கு அறுத்துப் பலியிடுபவனை அல்லாஹ் சபிக்கின்றான்."

(ஸஹீஹ் முஸ்லிம்)

இவ்வாறு பலியிடுவதில் இருவகையான குற்றங்கள் இருக்கின்றன.

1) அல்லாஹ் அல்லாதவற்றிற்காக அறுத்துப் பலியிட்ட குற்றம்.

2) அல்லாஹ் அல்லாதவர்களின் பெயரைக் கூறிய குற்றம்.

இந்த இரண்டின் காரணங்களாலும் இவை (ஹராமாகி) தடுக்கப்பட்டு விடுகின்றன.

சிலர் வீட்டையோ நிலத்தையோ வாங்கினால் அல்லது கிணறு தோண்டுவதாக இருந்தால் அங்குள்ள ஜின்(பேய், பிசாசு)களின் தீங்குகளை விட்டுப் பாதுகாப்புத் தேடுவதற்காகப் பிராணிகளை அறுத்துப் பலியிடுகிறார்கள். இதுவும் 'ஷிர்க்' ஆகும்.

## 5. அல்லாஹ் விலக்கியதை ஆகுமாக்குவது, அல்லாஹ் ஆகுமாக்கியதை விலக்கிக் கொள்வது 'ஷிர்க்'

அல்லாஹ் விலக்கியதை ஆகுமாக்குவது, அல்லாஹ் ஆகுமாக்கியதை விலக்கிக் கொள்வது அல்லது அல்லாஹ்வைத் தவிர பிறருக்கும் இவ்வுரிமை உண்டென நம்புவது அல்லது மார்க்கத்தின் தீர்ப்பை விட்டுவிட்டு அது அல்லாத வேறு வகையான தீர்ப்புகளை (எவ்வித நிர்ப்பந்தமுமின்றியே) தேடிச் செல்வது, மேலும் அதை அனுமதிக்கப்பட்டதாகவும் நம்புவது ஆகிய அனைத்தும் சமுதாயத்தில் பரவி நிற்கும் 'ஷிர்க்' ஆன காரியங்களாகும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

ٱتَّخَذُوٓا۟ أَحْبَارَهُمْ وَرُهْبَٰنَهُمْ أَرْبَابًا مِّن دُونِ ٱللَّهِ

இவர்கள் அல்லாஹ்வை விடுத்து தங்கள் பாதிரிகளையும் சன்னியாசிகளையும், மர்யமுடைய மகன் மஸீஹையும் (தங்கள்) தெய்வங்களாக எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். (ஸூரா அத்தவ்பா 9:31)

فلما سمع عدي بن حاتم النبي صلى الله عليه وسلم يقرأ هذه الآية قال يا رسول الله إنهم لم يعبدوهم فقال بلى إنهم حرموا عليهم الحلال وأحلوا لهم الحرام فاتبعوهم فذلك عبادتهم إياهم وفي رواية أن النبي عليه السلام قال تفسيرا لهذه الآية أما إنهم لم يكونوا يعبدونهم ولكنهم كانوا إذا أحلوا لهم شيئا استحلوه وإذا حرموا عليهم شيئا حرموه

அதீ இப்னு ஹாத்திம் (ரழி) அவர்கள் கூறுகிறார்கள்: "நபி (ஸல்)

அவர்கள் இவ்வசனத்தை ஓதிக் காட்டியபோது 'கிறித்தவர்கள் தங்கள் பாதிரிகளையும் சன்னியாசிகளையும் வணங்கவில்லையே' என்று நான் கேட்டேன். அதற்கு நபி (ஸல்) அவர்கள் 'ஆம்! எனினும் அல்லாஹ் விலக்கியதை பாதிரிகள் ஆகுமாக்கி வைக்கும்போது அதை மற்றவர்களும் ஆகுமானதாக எண்ணுகிறார்கள். அல்லாஹ் ஆகுமாக்கியதை அப்பாதிரிகள் விலக்கும்போது அதை மக்கள், விலக்கப்பட்டதாக ஏற்றுக் கொள்கிறார்கள். எனவே, இதுதான் கிறித்தவர்கள் தங்களது பாதிரிகளுக்கும் துறவிகளுக்கும் செய்த (இபாதத்) வணக்கமாகும்" என்று கூறினார்கள்.

(ஸுனனுத் திர்மிதி)

இணைவைப்பவர்களைப் பற்றி அல்லாஹ் பின்வருமாறு விவரித்துக் காட்டுகிறான்.

وَلَا يُحَرِّمُونَ مَا حَرَّمَ ٱللَّهُ وَرَسُولُهُۥ وَلَا يَدِينُونَ دِينَ ٱلْحَقِّ

அல்லாஹ்வும் அவனது தூதரும் தடை செய்தவற்றை, ஆகாதவையெனக் கருதாமலும் இந்தச் சத்திய மார்க்கத்தைப் பின்பற்றாமலும் இருக்கிறார்கள்.. (ஸூரா அத்தவ்பா 9:29)

## 6. சூனியம் செய்வது, சோதிடம் பார்ப்பது, குறி கேட்பது 'குஃப்ர்'

சூனியம் (ஸிஹ்ர்) செய்வது இறை நிராகரிப்பு (குஃப்ர்) ஆகும். அழிவை ஏற்படுத்தும் ஏழு பாவங்களில் ஒன்றாகும். இது மனிதர்களுக்கு எவ்வித நற்பலனும் அளிக்காமல் பெருந்தீமையைத்தான் ஏற்படுத்தும்.

அல்லாஹ் கூறுகின்றான்:

وَيَتَعَلَّمُونَ مَا يَضُرُّهُمْ وَلَا يَنفَعُهُمْ

அன்றி, அவர்களுக்கு யாதொரு பலனுமளிக்காமல் தீங்கிழைக்கக் கூடியது எதுவோ அதைத்தான் அவர்கள் கற்றுக் கொள்கிறார்கள்....

(ஸூரா அல்பகறா 2:102)

மேலும் கூறுகிறான்:

وَلَا يُفْلِحُ ٱلسَّاحِرُ حَيْثُ أَتَىٰ

சூனியக்காரர்கள் எங்கிருந்து வந்தபோதிலும் வெற்றி பெறவே மாட்டார்கள். (ஸூரா தாஹா 20:69)

சூனியம் செய்பவன் காஃபிர் (அல்லாஹ்வையும் அவன் மார்க்கத்தையும் நிராகரித்த நிரந்தர நரகவாசி) ஆவான்.

وَمَا كَفَرَ سُلَيْمَانُ وَلَـٰكِنَّ ٱلشَّيَـٰطِينَ كَفَرُوا۟ يُعَلِّمُونَ ٱلنَّاسَ ٱلسِّحْرَ

ஆனால் ஸுலைமானோ 'காஃபிர்' ஆக இருக்கவில்லை. அந்த ஷைத்தான்கள்தாம் மெய்யாகவே 'காஃபிர்' ஆக இருந்தார்கள். ஏனென்றால் அவர்கள் மனிதர்களுக்குச் சூனியத்தைக் கற்றுக் கொடுக்கிறார்கள்.... (ஸூரா அல்பகறா 2:102)

இவ்வசனத்தில் (ஷைத்தான்) 'ஜின்'கள், மனிதர்களுக்கு சூனியத்தைக் கற்றுக் கொடுக்கிறார்கள் என்ற காரணத்தைக் காட்டி அல்லாஹ் அவர்களைக் 'காஃபிர்' என்று கூறுகிறான்.

சூனியம் செய்பவனை இஸ்லாமிய அரசு கொலை செய்திட வேண்டும் என்று மார்க்கம் தீர்ப்பளிக்கிறது.

சூனியத்தின் மூலம் ஈட்டப்படும் செல்வம் அசுத்தமானது; ஹராமானது. அறியாத மக்களும் அநியாயக்காரர்களும் பலவீனர்களும் சிலரைப் பழிவாங்க வேண்டும் அல்லது கெடுதிகளை ஏற்படுத்த வேண்டும் என்பதற்காக சூனியக்காரர்களை நாடிச் செல்கிறார்கள். சிலர் சூனியத்தை அகற்றுவதற்காக சூனியக்காரர்களிடம் செல்கிறார்கள். இதுவும் பாவச் செயலாகும்.

இதுபோன்ற தீங்குகளை விட்டுப் பாதுகாப்புப் பெற அல்லாஹ்வையே நாடி அவனுடைய வசனங்களின் மூலமாகவே நிவாரணம் தேட வேண்டும்.

மறைவான விஷயங்கள் தங்களுக்குத் தெரியும் எனக் கூறி வருகிற சோதிடன் மற்றும் குறி சொல்பவன் இருவரும் (மார்க்கத்தை விட்டு வெளியேறிவிட்ட) 'காஃபிர்' ஆவர். ஏனென்றால், அல்லாஹ்வைத் தவிர வேறு எவரும் மறைவானவற்றை அறிய முடியாது.

عَالِمُ ٱلْغَيْبِ فَلاَ يُظْهِرُ عَلَىٰ غَيْبِهِ أَحَداً ۝ إِلاَّ مَنِ ٱرْتَضَىٰ مِن رَّسُولٍ فَإِنَّهُ
يَسْلُكُ مِن بَيْنِ يَدَيْهِ وَمِنْ خَلْفِهِ رَصَداً

அவன்தான் மறைவான இவ்விஷயங்களையெல்லாம் நன்கறிந்தவன். மறைவாக உள்ள இவ்விஷயங்களை அவன் ஒருவருக்கும் வெளிப்படுத்துவதும் இல்லை. ஆயினும் (தன்னுடைய) தூதர்களில் எவர்களைத் தேர்ந்தெடுத்தானோ அவர்களுக்கு (அதனை அவன் அறிவிக்கக் கூடும். அதனை அவன் அவர்களுக்கு அறிவித்த சமயத்தில்) நிச்சயமாக அவன் அவர்களுக்கு முன்னும் பின்னும் (ஒரு மலக்கைப்) பாதுகாப்பவராக அனுப்பி வைக்கின்றான். (ஸூரா அல்ஜின்னு 72:26,27)

قُل لاَّ يَعْلَمُ مَن فِي ٱلسَّمَاوَاتِ وٱلأَرْضِ ٱلْغَيْبَ إِلاَّ ٱللَّهُ وَمَا يَشْعُرُونَ
أَيَّانَ يُبْعَثُونَ

(நபியே!) நீங்கள் கூறுங்கள்: வானங்களிலோ பூமியிலோ மறைந்திருப்பவற்றை அல்லாஹ்வைத் தவிர மற்றெவரும் அறிய மாட்டார்—

(ஸூரா அந்நம்ல் 27:65)

பொய்யர்களும் சோதிடர்களும் அறிவீனர்களை ஏமாற்றிப் பணம் பறிக்க பல வழிகளில் முயல்கிறார்கள். அவர்களின் வார்த்தைகள் ஒரு முறை உண்மையாகிவிட்டால் 99 முறை பொய்யாகிவிடும் என்பதை அந்த அறிவீனர்கள் விளங்கிக் கொள்வதில்லை. வியாபார முன்னேற்றத்திற்காக என்றும், நல்ல மனைவி அமைய வேண்டுமென்றும், காணாமல் போன பொருட்களைக் கண்டுபிடிக்கவும் அவர்களை நாடிச் செல்கிறார்கள்.

குறி சொல்பவனின் வார்த்தையை உண்மையென நம்புகிறவன் 'காஃபிர்' ஆகி மார்க்கத்தை விட்டு வெளியேறிவிடுவான்.

قال النبي صلى الله عليه وسلم من أتى كاهنا فصدقه بما قال فقد كفر بما

أنزل على محمد صلى الله عليه وسلم رواه أحمد

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "சோதிடன் அல்லது குறிகாரனிடத்தில் வந்து அவன் கூறுவதை உண்மையென நம்பக் கூடியவன், முஹம்மதின் மீது இறக்கப்பட்ட இறைநூலை (குர்ஆனை) நிராகரித்தவனாவான்."

(முஸ்னது அஹ்மது)

ஒருவர் சோதிடன் அல்லது குறி சொல்பவனின் கூற்றைச் சோதித்துப் பார்ப்பதற்காக அவர்களிடம் சென்றால் அவர் 'காஃபிர்' ஆகிவிட மாட்டார். எனினும் இது, பெரும்பாவங்களில் ஒன்றாகும். அவரது 40 நாட்களின் தொழுகைகள் ஏற்கப்படாது.

قال رسول الله صلى الله عليه وسلم من أتى عرافا فسأله عن شيء لم

تقبل صلاة أربعين ليلة رواه مسلم

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "ஒருவர் குறி சொல்பவனை அணுகி அவனிடம் ஏதேனும் ஒரு விஷயத்தைப் பற்றிக் கேட்டால் அவருடைய 40 நாட்களின் தொழுகைகள் அங்கீகரிக்கப்படாது." (ஸஹீஹ் முஸ்லிம்)

இச்செயலைச் செய்தவர் தவ்பா – பாவமன்னிப்பு கோர வேண்டும். தொழுகையையும் தவறாது தொழ வேண்டும். 40 நாட்கள் தொழுகைகள் ஏற்கப்படாது என்பதற்காக தொழுகைகளை நிறைவேற்றாமல் இருந்துவிடக் கூடாது.

## 7. கிரகப் பலன்களையும் ராசி பலன்களையும் நம்புவது 'குஃப்ர்'

நட்சத்திரங்கள் மூலமாக ராசி பலன்கள் பார்ப்பதும், கோள்கள் மற்றும்

நட்சத்திரங்கள் மனித வாழ்வின் மீது தாக்கங்களை ஏற்படுத்துகின்றன என நம்புவது குஃப்ர் (இறைநிராகரிப்பு) ஆகும்.

عن زيد بن خالد الجهني قال صلى لنا رسول الله صلى الله عليه وسلم
صلاة الصبح بالحديبية على أثر سماء كانت من الليل فلما انصرف أقبل
على الناس فقال هل تدرون ماذا قال ربكم ؟ قالوا الله ورسوله أعلم
قال أصبح من عبادي مؤمن بي وكافر فأما من قال مطرنا بفضل الله
ورحمته فذلك مؤمن بي كافر بالكوكب وأما من قال مطرنا بنوء كذا
وكذا فذلك كافر بي ومؤمن بالكوكب متفق عليه

ஸைது இப்னு காலிது அல்ஜுஹ்னி (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள் ஒரு முறை நபி (ஸல்) அவர்கள் ஹுதைபிய்யாவில் சுப்ஹு தொழுகையைத் தொழ வைத்தார்கள். அன்றிரவு மழை பெய்திருந்தது. தொழுகை முடிந்தவுடன் மக்களை முன்னோக்கி 'உங்களது இறைவன் என்ன கூறினான் என்பதை அறிவீர்களா?' என்று வினவினார்கள். 'அல்லாஹ்வும் அவனது தூதருமே நன்கறிந்தவர்கள்' என நபித்தோழர்கள் கூறினார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ் கூறினான், "எனது அடியார்களில் என்னை நம்பிக்கை கொண்டவர்களும் என்னை மறுத்தவர்களும் இருக்கின்றனர். அல்லாஹ்வின் கருணையாலும் அவனது அருளாலும் நமக்கு மழை பொழிந்தது என்று கூறியவர் என்னை நம்பிக்கை கொண்டு கிரகங்களை மறுத்தவராவார். இன்ன கிரகத்தின் காரணமாக மழை பொழிந்தது என்று கூறுபவர் என்னை நிராகரித்து கிரகத்தை நம்பிக்கை கொண்டவராவார்." (ஸஹீஹுல் புகாரி

நாளிதழ், வார இதழ், மாத இதழ்களில் வெளியிடப்படும் நட்சத்திர எண், தேதி, ராசி பலன்களை நம்புவது 'குஃப்ர்' ஆகும். அவற்றை வெறும் படிப்பது கூட பெரும் குற்றமாகும். காரணம், அவை 'குஃப்ர்'க்கு வழிவகுத்து விடும்.

## 8. அல்லாஹ் அனுமதிக்காதவற்றில் பலன்களைத் தேடுவது 'ஷிர்க்'

சிலர் தாயத்துகள், கயிறுகள், வளையங்கள் போன்றவற்றை அணிந்து கொள்கிறார்கள்; அல்லது தங்களது பிள்ளைகளுக்கு அணிவிக்கிறார்கள் சிலர் தங்களது கை, கழுத்து, இடுப்பில் அவற்றைக் கட்டிக் கொள்கிறார்கள்

சிலர் சில கற்களை ராசிக்கல் என்று கூறி அதை மோதிரங்களில் பதித்து அணிகிறார்கள்.

இவ்வகையான அனைத்து செயல்களும் இறைநம்பிக்கைக்கு எதிரானதாகும். இவை இறைநம்பிக்கையில் (ஈமானில்) பலவீனத்தை ஏற்படுத்துகின்றன. இவற்றின் மூலம் நிவாரணம் தேடுவது மார்க்கத்தில் தடுக்கப்பட்டதாகும்.

பெரும்பாலான தாயத்துகளில் அல்லாஹ்வுக்கு இணை வைக்கும் வாசகங்கள், புரிந்துகொள்ள முடியாத சில படங்கள், எழுத்துகள், கட்டங்கள் எழுதப்படுகின்றன. தாயத்து எழுதுபவர்களில் சிலர் குர்ஆன் வசனங்களையும் இணை கற்பிக்கும் வாசகங்களையும் இணைத்து எழுதுகிறார்கள். சிலர் அல்குர்ஆன் வசனங்களை நஜீஸ்(அசுத்தங்)களைக் கொண்டோ அல்லது மாதவிடாய் உதிரத்தைக் கொண்டோ எழுதுகிறார்கள். இம்மாதிரியானவற்றை அணிந்து கொள்வதும், எங்கேனும் தொங்க விடுவதும் தடுக்கப்பட்ட பெரும் பாவங்களாகும்.

قال رسول الله صلى الله عليه وسلم من علق تـــميمة فقد أشرك

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: “தாயத்தைத் தொங்க விட்டவன் அல்லாஹ்வுக்கு இணை வைத்துவிட்டான். ” (முஸ்னது அஹ்மது)

இக்காரியங்களைச் செய்பவனும், இவை தாமாகவே நன்மை, தீமை செய்யும் ஆற்றல் பெற்றவை என நம்புபவனும் பெரிய ‘ஷிர்க்’கைச் செய்தவனாவான்.

இவை நன்மை தீமைக்குக் காரணமாக அமையலாம் என்று நம்பிக்கை கொண்டால் அது ‘சிறிய ஷிர்க்’ ஆகும். அனைத்து வகை ஷிர்க்குகளும் பெரும் பாவங்களைவிட மிகக் கொடியவையாகும்.

## 9. பகட்டுக்காக வணங்குவது ‘ஷிர்க்’

நற்செயல்கள் அல்லாஹ்வின் திருப்தியை மட்டுமே நாடி மனத்தூய்மையுடன் செய்யப்பட வேண்டும். அவ்வாறு இல்லாமல் பகட்டுக்காக (பிறர் பார்த்து புகழ வேண்டுமென்பதற்காக மட்டும்) செய்வது ‘ஷிர்க்’ ஆகும். இதனால் அந்த நற்செயல் வீணாகிவிடும். இதை நயவஞ்சகர்களின் தன்மை என அல்லாஹ் கூறுகின்றான்:

إِنَّ ٱلْمُنَافِقِينَ يُخَادِعُونَ ٱللَّهَ وَهُوَ خَادِعُهُمْ وَإِذَا قَامُوٓاْ إِلَى ٱلصَّلَاةِ قَامُواْ
كُسَالَىٰ يُرَآءُونَ ٱلنَّاسَ وَلَا يَذْكُرُونَ ٱللَّهَ إِلَّا قَلِيلًا

நிச்சயமாக இந்த நயவஞ்சகர்கள் அல்லாஹ்வை வஞ்சிக்(கக் கருது)கின்றனர். எனினும் அல்லாஹ்வோ அவர்களை வஞ்சித்து விடுகின்றான். அவர்கள் தொழுகையில் நின்றாலோ சோம்பேறிகளாக நின்று மனிதர்களுக்குக் காண்பிக்(க விரும்பு)கின்றார்கள். அவர்கள் வெகு சொற்பமாகவே தவிர அல்லாஹ்வை நினைவு கூர்வதில்லை.

(ஸூரா அந்நிஸா 4:142)

நபி (ஸல்) அவர்களும் இதை வன்மையாகக் கண்டித்துக் கூறினார்கள்:

قال النبي صلى الله عليه وسلم من سمع سمع الله به ومن راءى راءى الله به

"பிறர் புகழ்வதற்காக எவன் வணங்குகிறானோ அவனை அல்லாஹ் தண்டிப்பான். பகட்டுக்காக எவன் வணங்குகிறானோ அவனையும் அல்லாஹ் தண்டிப்பான்." (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

ஒருவர் ஒரு நற்செயலை அல்லாஹ்வின் திருப்தியையும் மக்களின் புகழ்மொழிகளையும் நாடிச் செய்வாரேயானால் அவரின் அந்த நற்செயல் வீணானதே!

قال رسول الله صلى الله عليه وسلم قال الله تعالى أنا أغنى الشركاء عن

الشرك من عمل عملا أشرك فيه معي غيري تركته وشركه وفي رواية

فأنا منه بريء هو للذي عمله رواه مسلم

அல்லாஹ் கூறுவதாக நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "இணை வைப்பவர்களின் இணையை விட்டு நான் முற்றிலும் தேவையற்றவன். எவன் தனது நற்செயலில் என்னுடன் பிறரை இணைத்துக் கொண்டானோ அவனை அவனது இணை வைக்கும் செயலுடன் விட்டுவிடுகிறேன்."

(ஸஹீஹ் முஸ்லிம்)

ஒருவர் ஒரு நற்செயலை அல்லாஹ்வுக்காகத் தொடங்குகிறார். பிறகு அவரது உள்ளத்தில் பகட்டு எண்ணம் ஏற்படுகிறது. உடனே அவர் அந்தத் தீய எண்ணத்தை மனதிலிருந்து அகற்றிட முயற்சி செய்வாரெனில் அவரது நற்செயல் வீணாகிவிடாது.

ஆனால் அந்தத் தவறான எண்ணம் வரும்போது அதைத் தடுப்பதற்கு முயற்சி செய்யாமலிருந்தால் அந்த நற்செயல் வீணாகிவிடும்.

## 10. சகுனம் பார்ப்பது 'ஷிர்க்'

அறியாமைக்கால அரபியர்கள் ஏதேனும் ஒரு செயலைச் செய்ய நாடினால் ஒரு பறவையைப் பிடித்து அதைப் பறக்க விடுவார்கள். அது வலப்பக்கமாகப் பறந்தால் அதை நல்ல சகுனமாக நம்பி அந்தக்

காரியத்தைச் செய்வார்கள்; இடப்பக்கம் பறந்தால் அதைத் துர்ச்சகுனம் என நம்பி அக்காரியத்தைத் தவிர்த்து விடுவார்கள்.

அல்லாஹ் குறிப்பிடுகின்றான்:

فَإِذَا جَآءَتْهُمُ ٱلْحَسَنَةُ قَالُوا۟ لَنَا هَـٰذِهِۦ وَإِن تُصِبْهُمْ سَيِّئَةٌ يَطَّيَّرُوا۟ بِمُوسَىٰ وَمَن مَّعَهُۥٓ

எனினும் அவர்களோ, அவர்களுக்கு (யாதொரு) நன்மை வரும் சமயத்தில் "எங்களுக்கு (வரவேண்டியது)தான் வந்தது" என்றும் யாதொரு தீங்கேற்படும் சமயத்தில் "(இது எங்களுக்கு வரவேண்டியதல்ல. எனினும்) பீடை பிடித்த இந்த) மூஸாவாலும் அவருடைய மக்களாலுமே வந்தது" என்றும் கூறினார்கள்... (ஸூரா அல்அஃராஃப் 7:131)

قال رسول الله صلى الله عليه وسلم الطيرة شرك رواه أحمد

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: சகுனம் பார்ப்பது 'ஷிர்க்' ஆகும். (முஸ்னது அஹ்மது, ஸுனனுத் திர்மிதி)

அல்லாஹ்வின் மீதுள்ள முழுமையான நம்பிக்கைக்கும் (ஈமானுக்கும்) இஸ்லாமியக் கொள்கை உறுதிக்கும் எதிரான இந்த மூடநம்பிக்கை பல வடிவங்களில் இருக்கின்றன. உதாரணமாக, 'ஸஃபர்' மாதத்தையும், கடைசிப் புதனையும் பீடையாக நம்புவது, 'ஸஃபர்' மாதத்தில் திருமணம் செய்வதைத் தவிர்ப்பது, சில எண்களையும் பெயர்களையும் அதிர்ஷ்டம் இல்லாதவையாக கருதுவது, பூனை மற்றும் விதவை, மலடி, ஊனமுற்றவர்கள், பார்வையற்றவர்கள் குறுக்கே சென்றால், போகிற காரியம் நன்மையில் முடியாது என நம்புவது, (இதேபோல் ஒரு காரியத்திற்காக புறப்படுபவரிடம் 'எங்கே போகிறீர்கள்' எனக் கேள்வி கேட்கக் கூடாது என நம்புவது, பிரசவித்த தாயையும் அவளின் குழந்தையையும் 40 நாட்கள் வரை கர்ப்பிணிப் பெண்கள் பார்க்கக் கூடாது என நம்புவது) - இவை போன்ற அனைத்தும் அல்லாஹ்வுக்கு இணை வைக்கிற பாவங்களாகும்.

இப்படிப்பட்ட செயல்களில் ஈடுபடுபவர்கள் தங்களை விட்டு விலகிவிட்டதாக நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

عن عمران بن حصين قال قال رسول الله صلى الله عليه وسلم ليس منا من تطير أو تطير له أو تكهن أو تكهن له أو سحر أو سحر له

"சகுனம் பார்ப்பவனும் யாருக்காக சகுனம் பார்க்கப்படுகிறதோ அவனும், சோதிடம் பார்ப்பவனும், யாருக்காக சோதிடம் பார்க்கப்படுகிறதோ அவனும்,

சூனியம் செய்பவனும் எவன் சார்பாக சூனியம் செய்யப்படுகிறதோ அவனும் நம்மைச் சார்ந்தவன் அல்லன்."

(முஃஜமுத் தப்ரானி, ஸுனனுத் திர்மிதி)

இவ்வாறான செயல்கள் நடந்து விட்டால் அதற்கான பரிகாரத்தை நபி (ஸல்) அவர்கள் கற்றுத் தந்துள்ளார்கள்.

عن ابن عمر قال قال رسول الله صلى الله عليه وسلم من ردته الطيرة

عن حاجته فقد أشرك قالوا يا رسول الله وما كفارة ذلك قال يقول

اللهم لا طير إلا طيرك ولا خير إلا خيرك ولا إله غيرك

"துர்ச்சகுனம் ஒருவனை அவனது காரியத்தை விட்டு தடுத்துவிட்டால் அவன் இணைவைத்து விட்டான்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: (அதனைக் கேட்ட) தோழர்கள், "அல்லாஹ்வின் தூதரே! அதற்கான பரிகாரம் என்ன?" என்று வினவினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் "அல்லாஹும்ம லா கைர இல்லா கைருக், வலா தய்ர இல்லா தய்ருக, வலா இலாஹ ஙைருக்க" - "அல்லாஹ்வே! உனது நன்மையைத் தவிர வேறு எந்த நன்மையும் இல்லை; உனது சகுனமின்றி வேறெந்தச் சகுனமும் இல்லை; உன்னைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை என்று சொல்லி விட்டும்" எனக் கூறினார்கள். (முஸ்னது அஹ்மது)

அல்லாஹ்வின் மீது முழுமையான நம்பிக்கை வைப்பது மட்டுமே, சகுனம் பார்க்கும் தீயச் செயலை விட்டு நம்மைப் பாதுகாப்பதற்கான கேடயமாகும்.

عن ابن مسعود أن رسول الله صلى الله عليه وسلم قال الطيرة شرك

الطيرة شرك الطيرة شرك وما منا إلا ولكن الله يذهبه بالتوكل

அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊது (ரழி) அவர்கள் கூறினார்கள்: "நம்மில் ஒவ்வொருவருக்கும் இதுபோன்று மன ஊசலாட்டம் ஏற்படலாம். என்றாலும் 'தவக்கல்' என்ற (அல்லாஹ்வின் மீது உறுதியாக பொறுப்புச் சாட்டுகிற) தன்மையைக் கொண்டு அல்லாஹ் அதனைப் போக்கிவிடுவான்."

(ஸுனன் அபூதாவூது)

## 11. அல்லாஹ் அல்லாதவற்றின் மீது சத்தியம் செய்வது 'ஷிர்க்'

அல்லாஹ் தன்னுடைய படைப்பினங்களில் எதன் மீதும் சத்தியம் செய்வான். ஆனால், நாம் அல்லாஹ்வைத் தவிர வேறு எதன் மீதும் சத்தியம் செய்வதை அல்லாஹ் தடை செய்துள்ளான். ஏனென்றால், ஒன்றின்

மீது சத்தியம் செய்யும்போது அதன் மகத்துவமும் அங்கு அறியப்படுகிறது. நம்மால் மேன்மைப்படுத்துவதற்கு மிகத் தகுதியானவன் அல்லாஹ் மட்டுமே ஆவான்.

قال رسول الله صلى الله عليه وسلم إن الله ينهاكم أن تحلفوا بآبائكم

فمن كان حالفا فليحلف بالله وإلا فليصمت رواه البخاري

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: “அறிந்து கொள்ளுங்கள்! நிச்சயமாக அல்லாஹ் நீங்கள் உங்கள் மூதாதையர் மீது சத்தியம் செய்வதைத் தடை செய்கிறான். எவராவது சத்தியம் செய்வதாக இருந்தால் அல்லாஹ்வின் மீதே சத்தியம் செய்யட்டும். அல்லது வாய்மூடி இருக்கட்டும்.”

(ஸஹீஹுல் புகாரி)

عن ابن عمر مرفوعا من حلف بغير الله فقد كفر أو أشرك

இன்னும் கூறினார்கள்: “அல்லாஹ் அல்லாதவற்றின் மீது சத்தியம் செய்தவன் நிச்சயமாக இணைவைத்து விட்டான்.” (முஸ்னது அஹ்மது)

قال رسول الله صلى الله عليه وسلم من حلف بالأمانة فليس منا

மேலும் கூறினார்கள்: “நம்பகத் தன்மையின் (அமானத்) மீது சத்தியம் செய்தவன் நம்மைச் சார்ந்தவன் அல்லன்.” (ஸுனன் அபூதாவூது)

“நீங்கள் என் மீது கொண்டிருக்கும் நம்பிக்கையின் மீது ஆணையாக” என சத்தியம் செய்வது அரபியர்களின் வழமையாக இருந்தது.

கஅபாவின் மீதோ, மனித வாழ்வின் மீதோ, நபிமார்கள் மற்றும் இறைநேசர்களுடைய கண்ணியத்தின் மீதோ, தாய் தந்தை மற்றும் பிள்ளைகள் மீதோ இப்படி அல்லாஹ்வைத் தவிர எதன் மீதும் சத்தியம் செய்வது கூடாது. அவ்வாறு செய்துவிட்டால் உடனடியாக ‘லா இலாஹ இல்லல்லாஹ்’ என்று கூறிவிட வேண்டும்.

قال رسول الله صلى الله عليه وسلم من حلف فقال في حلفه باللات

والعزى فليقل لا إله إلا الله متفق عليه

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: லாத், உஸ்ஸாவின் மீது சத்தியம் செய்தவர் ‘லா இலாஹ இல்லல்லாஹ்’ என்று கூறிவிடட்டும்.

(ஸஹீஹுல் புகாரி)

இத்துடன் ஷிர்க்கை ஏற்படுத்தும் சில வாக்கியங்கள் இருக்கின்றன. அவற்றை விட்டு நாம் விலகிக் கொள்ள வேண்டும். அவை:

1) அல்லாஹ்வாலும் உங்களாலும் இது எனக்குக் கிடைத்தது.

2) அல்லாஹ்வைக் கொண்டும் உங்களைக் கொண்டும் பாதுகாவல்

தேடுகிறேன்.

3) அல்லாஹ்வையும் உங்களையும்தான் நம்பியிருக்கிறேன்.

4) அல்லாஹ்வையும் உங்களையும் தவிர எனக்கு வேறு எவருமில்லை.

5) அல்லாஹ் எனக்கு வானில், நீங்கள் எனக்கு பூமியில்.

6) அல்லாஹ்வும் இன்னாரும் இல்லாதிருந்தால் இப்படி நடந்திருக்கும்.

7) நான் இஸ்லாமிலிருந்து விலகிக் கொள்கிறேன்.

இன்னும், "வாழ்த்த வயதில்லை, எனவே வணங்குகிறோம்; உடல் மண்ணுக்கு, உயிர் உனக்கு; இதய தெய்வமே; செய்யும் தொழிலே தெய்வம்; கடவுள் மாதிரி வந்தீர்கள்; காசேதான் கடவுள்; வணக்கத்திற்குரிய மேயர்; தாய் மண்ணே வணக்கம் போன்ற வாக்கியங்கள் 'ஷிர்க்'கை ஏற்படுத்தி விடுகின்றன.

இதுபோன்றே காலத்தைக் குறை கூறிப் பேசுவதும் குற்றமாகும்.

உதாரணமாக: இது என் கெட்ட காலம், கெட்ட நேரம், காலம் என்னை வஞ்சித்து விட்டது, இயற்கையின் விருப்பம் போன்ற வார்த்தைகளைக் கூறுவதாகும்.

காலத்தை ஏசுவது அதைப் படைத்த அல்லாஹ்வை ஏசுவதாகும்.

عن أبي هريرة قال قال رسول الله قال الله تعالى يؤذيني ابن آدم يسب

الدهر وأنا الدهر بيدي الأمر أقلب الليل والنهار متفق عليه

அபூஹுரைரா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: அல்லாஹ் கூறியதாக நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள், "ஆதமின் மகன் எனக்கு நோவினை தருகிறான். அவன் காலத்தைத் திட்டுகிறான். நானே காலத்தைப் படைத்தவன். எனது கையில்தான் அனைத்தின் அதிகாரமும் இருக்கிறது. நானே இரவையும் பகலையும் மாறி வரச் செய்கிறேன்."

(ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

இவ்வாறே தவிர்க்க வேண்டிய சில பெயர்களையும் நாம் கவனத்தில் கொள்ள வேண்டும்.

அப்துல் மஸீஹ், அப்துந் நபி, அப்துர் ரஸூல், அப்துல் ஹுஸைன் (போன்ற பெயர்களையும் இதேபோல் நமது நாட்டில் பரவலாகக் காணப்படும் குலாம் ரஸூல், குலாம் நபி, குலாம் முஹம்மது, குலாம் முஹ்யத்தீன், குலாம் காஜா, குலாம் கரீப் நவாஸ், குலாம் அலீ, நாகூர் பிச்சை, மைதீன் பிச்சை, ஷாஜஹான்) போன்ற பெயர்களையும் தவிர்த்துக் கொள்ள வேண்டும்.

இவை போன்றே மலிக்குல் முலூக் (அரசர்களுக்கெல்லாம் அரசர்),

நீதிபதிகளுக்கெல்லாம் நீதிபதி என்ற பெயர்களை இடுவதும் தடுக்கப்பட்டதாகும்.

மேலும், முஸ்லிம் அல்லாதவர்(களில் உள்ள அரசியல்வாதி)களையும் பாவிகளையும் 'எங்கள் தலைவரே! பாதுகாவலரே!' எனப் பெயரிட்டு அழைப்பதும் புகழ்ந்து போற்றுவதும் (வணக்கம் போன்ற வார்த்தைகளைச் சொல்வதும்) கூடாது.

கவலையுடனும் கைசேதத்துடனும் 'இப்படி நான் செய்திருந்தால் அப்படி நடந்திருக்காது' என்று கூறுவதும், 'யா அல்லாஹ்! நீ நாடினால் என்னை மன்னித்துவிடு' என்று பிரார்த்திப்பதும் கூடாது.

இன்னும், இஸ்லாமியக் கம்யூனிசம்; இஸ்லாமிய ஜனநாயகம்; மக்கள் தீர்ப்பே மகேசன் தீர்ப்பு; மார்க்கம் அல்லாஹ்வுக்குச் சொந்தமானது, நாடு நமக்குச் சொந்தமானது; நாட்டுப் பற்று ஈமானில் பாதி போன்ற வார்த்தைகளைக் கூறுவதும், இவ்வார்த்தைகளின் கருத்துகளைக் கொள்கையாக்கிக் கொள்வதும் கூடாது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் காட்டிய வழிமுறைக்கும் ஏகத்துவக் கொள்கைக்கும் முரணான இதுபோன்ற முழக்கங்களையும் தத்துவங்களையும் உண்மை முஸ்லிம்கள் வெறுத்து ஒதுக்கிட வேண்டும்.

இதேபோல் மொழியின் பெயராலோ, நாட்டின் பெயராலோ, இனத்தின் பெயராலோ, கம்யூனிசம், ஜனநாயகம், மதச்சார்பின்மை போன்ற மாற்றாரின் தத்துவங்கள் பெயராலோ, இயக்கத்தின் பெயராலோ மக்களைத் திரட்டுவதும் சமுதாயத்தைப் பிளவுபடுத்துவதும் தடுக்கப்பட்டதாகும். இக்கொள்கைகளுக்காக பிரசாரங்கள் செய்வதை விட்டு ஒருவர் விலகிக் கொள்ளவில்லையானால் அவர் சில சமயம் இணைவைப்பில் வீழ்ந்துவிடுகிற அபாயத்திற்கும் ஆளாவார்.

## 12. பாவிகள், நயவஞ்சகர்களுடன் அமர்ந்து மகிழ்ச்சியடைவது, அவர்களை மகிழ்விப்பது

மார்க்கக் கொள்கையில் பலவீனமுள்ள சிலர் தீய நடத்தையும் வழிகெட்ட சிந்தனையும் உடையவர்களுடன் நட்பு கொண்டு அவர்களுடன் அமர்வதை வழமையாகக் கொண்டுள்ளனர். இன்னும் சிலர் மார்க்கத்தையும் அதைப் பின்பற்றுபவர்களையும் பரிகாசம் செய்யக்கூடிய பாவிகளுடன் அமர்ந்துப் பேசிக் கொண்டிருக்கின்றனர். இவை விலக்கப்பட்ட செயல்களாகும். இவ்வாறு செய்பவர்களின் மார்க்கப்பற்று பறிபோகி விடும். இத்தகையவர்களை அல்லாஹ் வன்மையாகக் கண்டிக்கின்றான்.

وَإِذَا رَأَيْتَ ٱلَّذِينَ يَخُوضُونَ فِيٓ ءَايَٰتِنَا فَأَعْرِضْ عَنْهُمْ حَتَّىٰ يَخُوضُوا۟ فِي حَدِيثٍ غَيْرِهِۦ وَإِمَّا يُنسِيَنَّكَ ٱلشَّيْطَٰنُ فَلَا تَقْعُدْ بَعْدَ ٱلذِّكْرَىٰ مَعَ ٱلْقَوْمِ ٱلظَّٰلِمِينَ

(நபியே!) நம் வசனங்களைப் பற்றி (வீண்) விவாதங்களில் சூழ்ந்திருப்பவர்களை நீங்கள் கண்டால் அவர்கள் அதனைத் தவிர்த்து வேறு விஷயத்தில் ஈடுபடும் வரையில் நீங்கள் அவர்களைப் புறக்கணித்துவிடுங்கள். (இக்கட்டளையை) ஷைத்தான் உங்களுக்கு மறக்கடித்து (அவர்களுடன் நீங்களும் இருந்து) விட்டால் அது நினைவுக்கு வந்ததன் பின்னர் அந்த அநியாயக்கார மக்களுடன் அமர்ந்திருக்க வேண்டாம். (ஸூரா அல்அன்ஆம் 6:68)

தீய நடத்தையுடையவர்கள் நெருங்கிய உறவினர்களாக, மென்மையாகப் பழகுபவர்களாக இருந்தாலும் சரியே, அவர்களுடன் அமர்ந்து அளவளாவிக் கொண்டிருப்பது தடுக்கப்பட்டதாகும். ஆனால் சத்தியத்தின்பால் அழைக்கவும், நன்மையை ஏவி, தீமையைத் தடுக்கும் நோக்கத்திலும் அவர்களை அணுகுவது தவறில்லை. மாறாக, அச்செயல் வரவேற்கத் தக்கதாகும்.

அவர்களது தீய செயல்களைக் கண்டிக்காமல் மவுனம் காப்பது அல்லது அதை அங்கீகரிப்பது குற்றமாகும்.

## 13. நிதானமின்றித் தொழுவது கூடாது

தொழுகையில் திருடுவது மிகப் பெரிய குற்றமாகும்.

قال رسول الله صلى الله عليه وسلم أسوأ الناس سرقة الذي يسرق من صلاته

قالوا يا رسول الله وكيف يسرق من صلاته ؟ قال لا يتم ركوعها ولا سجودها

“திருடர்களில் மிக மோசமான திருடன் தொழுகையில் திருடுபவனே” என்று நபி (ஸல்) அவர்கள் கூறியபோது தோழர்கள், “அல்லாஹ்வின் தூதரே! அவன் தனது தொழுகையில் எப்படித் திருடுவான்?” என்று வினவினார்கள். அதற்கு நபி (ஸல்) அவர்கள், “அவன் தொழுகையின் ருகூவையும் ஸுஜூதையும் முழுமையாகச் செய்ய மாட்டான்” என்று கூறினார்கள். (முஸ்னது அஹ்மது)

மஸ்ஜிதுகளில் ருகூவையும் ஸஜ்தாவையும் நிதானிக்காமல் அவசரகதியில் தொழுகிற பலரைக் காண்கிறோம். இவ்வாறே ருகூவிலிருந்து எழுந்த பின்பும் இரு ஸஜ்தாக்களுக்கிடையே அமரும்போதும் அவர்கள் நிதானிப்பதில்லை. ஒவ்வொரு செயலிலும் முதுகை நிறுத்தி நிலைபெறச் செய்வது நிதானித்தல் ஆகும்.

தொழுகையில் ஒவ்வொரு செயலையும் ஒன்றோடொன்று இணைத்து விடாமல் தனித் தனியாகப் பிரித்து நிதானமாக நிறைவேற்றுவது கட்டாயக் கடமையாகும்.

قال رسول الله صلى الله عليه وسلم لا تجزىء صلاة الرجل حتى يقيم ظهره في الركوع والسجود رواه أبوداود

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "ருகூவு, ஸஜ்தாவில் முதுகை சரிவர நிலைநிறுத்தும் வரை ஒருவரின் தொழுகை நிறைவேறாது."

(ஸுனன் அபூதாவூது)

عن أبي عبد الله الأشعري قال صلى رسول الله صلى الله عليه وسلم بأصحابه ثم جلس في طائفة منهم فدخل رجل فقام يصلي فجعل يركع وينقر في سجوده فقال النبي صلى الله عليه وسلم أترون هذا من مات على هذا مات على غير ملة محمد ينقر صلاته كما ينقر الغراب الدم إنما مثل الذي يركع وينقر في سجوده كالجائع لا يأكل إلا التمرة والتمرتين فماذا تغنيان عنه

அபூ அப்தில்லாஹ் அல்அஷ்அரீ (ரழி) அவர்கள் கூறுகிறார்கள்: "நபி (ஸல்) அவர்கள் தங்களது தோழர்களுக்குத் தொழ வைத்தப் பின் அவர்களில் சிலருடன் அமர்ந்திருந்தார்கள். அப்போது ஒருவர் பள்ளிக்குள் வந்து தொழுதார். அவர் பறவைகள் தானியங்களைக் கொத்துவது போன்று ருகூவு, ஸஜ்தாவைச் செய்தார். அதைக் கண்ட நபி (ஸல்) அவர்கள், "இவரைப் பார்த்தீர்களா? இதே நிலையில் ஒருவர் மரணித்தால் அவர் முஹம்மதின் மார்க்கம் அல்லாததில் மரணிக்கிறார். இவர், காகம் ரத்தத்தைக் கொத்தித் தின்பதுபோல் தொழுகையைக் கொத்துகிறார். தொழுகையில் பறவைகள் கொத்துவதைப் போன்று ஸஜ்தா செய்பவர் கடும்பசியில் ஒன்று அல்லது இரண்டு பேரீச்சங்கனிகளை உண்பவரைப் போன்றாவார். அது அவருடைய பசியை எவ்வாறு போக்கும்" என்று கூறினார்கள்.

(ஸஹீஹ் இப்னு குஸைமா)

إن حذيفة رأى رجلا لا يتم ركوعه ولا سجوده فلما قضى صلاته دعاه فقال له حذيفة ما صليت قال وأحسبه قال ولو مت مت على غير الفطرة التي فطر الله محمدا صلى الله عليه وسلم رواه البخاري

ஸைது இப்னு வஹப் (ரஹ்) அவர்கள் அறிவிக்கிறார்கள்: ஒரு முறை ருகூவு மற்றும் ஸஜ்தாவை சரிவர நிறைவேற்றாத ஒருவரை ஹுதைஃபா (ரழி) கண்டபோது, அவரிடம் 'நீ தொழவில்லை. இதே நிலையில் நீ

மரணித்தால் முஹம்மது (ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் அருளிய மார்க்கம் அல்லாததில் மரணித்தவனாவாய்' என்று கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

ஒருவர் ருகூவு, ஸஜ்தாவைச் சரிவர நிறைவேற்றாமல் நிதானமின்றித் தொழுதப் பிறகு அதுபற்றிய சட்டம் அவருக்குத் தெரிய வந்தால் அவர், தாம் தொழுத அந்த நேர (வக்து)த் தொழுகையை மட்டும் திருப்பித் தொழ வேண்டும். அதற்கு முந்தைய தொழுகைகளில் ஏற்பட்ட தவறுகளுக்காக அல்லாஹ்விடம் மன்னிப்புக் கோரி பாவமீட்சி பெற வேண்டும்.

قال رسول الله صلى الله عليه وسلم فصل فإنك لم تصل رواه البخاري

நிதானமின்றித் தொழுத ஒருவரைப் பார்த்தபோது நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "திரும்பச் சென்று தொழு! நீ தொழவே இல்லை."

(ஸஹீஹுல் புகாரி)

## 14. வீண் செயல்கள் மற்றும் அதிக அசைவுகளுடன் தொழுவது கூடாது

தொழும்போது வீண் செயல்களில் ஈடுபடுவதும் அதிகமாக அசைவதும் குற்றம். ஆனால் இதில் தொழுகையாளிகளில் பலர் அலட்சியமாகவே இருக்கின்றனர்.

وَقُومُواْ لِلَّهِ قَانِتِينَ

மேலும் (தொழுகையில்) அல்லாஹ்வுக்குப் பயந்து மிக்க உள்ளச்சத்தோடு நில்லுங்கள். (ஸூரா அல்பகறா 2:238)

قَدْ أَفْلَحَ ٱلْمُؤْمِنُونَ ٱلَّذِينَ هُمْ فِي صَلَاتِهِمْ خَاشِعُونَ

நம்பிக்கையாளர்கள் வெற்றி அடைந்து விட்டனர். அவர்கள் மிக்க உள்ளச்சத்தோடு தொழுவார்கள். (ஸூரா அல்முஃமினூன் 23:1,2)

وعن معيقيب أن النبي صلى الله عليه وسلم قال لا تمسح الحصى وأنت
تصلي فإن كنت لا بد فاعلا فواحدة تسوية الحصى رواه البخاري

நபி (ஸல்) அவர்களிடம் ஸஜ்தா செய்யும்போது மண்ணை சமப்படுத்துவது பற்றி கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள், "நீங்கள் தொழும்போது அவ்வாறு தடவாதீர்கள்; செய்தேயாக வேண்டுமெனில் ஒருமுறை மட்டும் பொடிக் கற்களை சமப்படுத்திக் கொள்ளுங்கள்" என்று கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

இதனால் தேவையின்றி தொடர்ந்து பலமுறை அசைவது தொழுகையை வீணாக்கிவிடும் என அறிஞர்கள் கூறியுள்ளார்கள்.

இன்னும் எத்தனையோ தொழுகையாளிகள் மகத்தான இறைவனுக்கு முன் நிற்கிறோம் என்ற உணர்வே இல்லாமல் வீணான செயல்களைச் செய்து வருகிறார்கள். சிலர் தொழுகையில் தங்களது கைக் கடிகாரங்களை பார்த்துக் கொள்கிறார்கள்; சிலர் ஆடைகளைச் சரிசெய்து கொள்வதை வழமையாகக் கொள்கிறார்கள்; சிலர் மூக்குத் துவாரத்தினுள் விரலை நுழைத்து நோண்டிக் கொண்டிருக்கிறார்கள்; சிலர் இங்குமங்கும் பார்வையை அலைபாய விடுகிறார்கள்; சிலர் வானத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். இவை அனைத்தும் தவிர்க்கப்பட வேண்டிய குற்றங்களாகும்.

(இன்று நம்மில் பெரும்பாலானவர்களிடம் அலைபேசிகள் (செல்ஃபோன்கள்) இருக்கின்றன. தொழுகைக்கு நிற்கும்போது இவற்றின் இயக்கத்தை நிறுத்தி (சுவிட்சு ஆஃப் செய்து)விட வேண்டும்; அல்லது ஒலி எழுப்பாத வகையில் (சைலண்ட் மோடில்) அமைதி நிலைக்கு மாற்றிவிட வேண்டும். இதைச் செய்யாமல் அலட்சியமாக தொழுகைக்கு நிற்பது, தொழுகையின் கண்ணியத்தைப் பாழாக்கிக் கொள்வதாகும். ஏனென்றால், தொழுது கொண்டிருக்கும் நேரத்தில் நாம் வைத்துள்ள அலைபேசிகள் ஒலிக்கத் தொடங்கிவிட்டால், தொழுகையின் மீதான கவனமும் மன ஓர்மையும் சிதைந்து விடுகின்றன. உலக விவகாரங்களைப் பற்றிய சிந்தனைகள் கிளறிவிடப்படுகின்றன. உள்ளச்சம் மறைந்து, தொழுகையின் நோக்கங்கள் அடிபட்டு விடுகின்றன.

இக்குழப்ப நிலை அலைபேசியை ஒலிக்க விட்டவருக்கு மட்டுமின்றி, அவருடன் சேர்ந்து தொழுகிற அனைவரையும் பாதிக்கிறது; அனைவரின் தொழுகைகளையும் களங்கப்படுத்துகிறது. எனவே, அலைபேசிகள் வைத்திருக்கிற ஒவ்வொரு தொழுகையாளியும் இது விஷயத்தில் அல்லாஹ்விற்கு அஞ்ச வேண்டும். அதிலும் குறிப்பாக, இசைப் பாடல்களை ஒலிக்கவிட்டு கண்ணியமிக்க அல்லாஹ்வின் இல்லத்தை ஷைத்தானின் ஓசைகளால் நிரப்புகிற மகா பாவத்தையும் விட்டொழிக்க வேண்டும். இசையின் அனைத்து வடிவங்களும் மார்க்கத்தில் ஹராமாக்கப்பட்டுள்ளன. இந்நிலையில் அலைபேசியில் இசைப் பாடல்களை வைத்திருப்பது மட்டுமின்றி, கேவலமும் ஆபாசமும் மிக்க திரைப்படப் பாடல்களை அல்லாஹ்வின் இல்லத்திலேயே இசைக்கவிடுவது, அல்லாஹ்வின் கோபத்திற்குரிய செயலாகும். அல்லாஹ்விற்கு அஞ்சுகிற தொழுகையாளிகள் உடனடியாக இப்பாவத்தை விட்டுத் தவ்பா செய்து மீள வேண்டும்.

தங்களுடைய தொழுகைகளை வீணாக்கிக் கொள்வது மட்டுமின்றி, மற்றவர்களின் தொழுகைகளையும் வீணாக்குவதைப் பற்றிய குற்றத்தை

நினைத்துப் பார்க்க வேண்டும். உளூ செய்வதை எப்படி தவறாமல் பேணுகிறோமோ அதுபோல், தொழுகைக்கு நிற்கும் முன்னும் மஸ்ஜிதுக்குள் செல்லும் முன்னும் அலைபேசியை அணைத்துவிட்டு தொழுவதை பழக்கப்படுத்திக் கொள்ள வேண்டும். இந்தப் பேணுதலை எல்லாம் தாண்டி, எப்போதேனும் அலைபேசியை அணைக்க மறந்து, இடையில் அது ஒலித்தால் உடனே எடுத்து அதன் இணைப்பைத் துண்டித்துவிட வேண்டும். தற்செயலாகவும் நிர்ப்பந்தமாகவும் ஏற்படுகிற இச்செயலினால் தொழுகை முறிந்துவிடாது.) - குறிப்பு: தொழுகையில் செல்ஃபோன் ஒலிப்பது குறித்த இவ்விளக்கத்தை மஸ்ஜிது இமாம்களும் பொறுப்பாளர்களும் தொழுகையாளிகளுக்கு எடுத்துரைக்க வேண்டும்.

## 15. தொழுகையில் வேண்டுமென்றே இமாமை முந்துவது கூடாது

அல்லாஹ் கூறுகின்றான்:

وَكَانَ الْإِنْسَانُ عَجُولاً

மனிதன் (இயற்கையாகவே பொறுமையிழந்து) அவசரக்காரனாக இருக்கின்றான். (ஸூரா பனீஇஸ்ராயீல் 17:11)

قال النبي صلى الله عليه وسلم التأني من الله والعجلة من الشيطان

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நிதானம் அல்லாஹ்வின் புறத்திலிருந்தும், அவசரம் ஷைத்தானின் புறத்திலிருந்தும் உள்ளதாகும். (ஸுனனுல் பைஹகீ)

தற்காலத்தில் பலர் வெகு அலட்சியத்துடன் தங்களது தொழுகையில் ருகூவு, ஸஜ்தா மற்றும் அனைத்து நிலைகளிலும் இமாமை முந்திவிடுகிறார்கள். இமாம் ஸலாம் சொல்வதற்கு முன்னதாக தாங்கள் ஸலாம் சொல்லி தொழுகையிலிருந்து வெளியேறி விடுகிறார்கள். இதன் விபரீதத்தை ஒரு பொருட்டாகவே அவர்கள் கருதுவதில்லை. ஆனால் மார்க்கமோ இதை மிக வன்மையாகக் கண்டிக்கின்றது.

قال رسول الله صلى الله عليه وسلم أما يخشى الذي يرفع رأسه قبل الإمام أن يحول الله رأسه رأس حمار متفق عليه

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "இமாமுக்கு முன் தனது தலையை உயர்த்துகின்றவர், அவரது தலையைக் கழுதையின் தலையாக அல்லாஹ் மாற்றிவிடுவான் என்பதை அஞ்சிக் கொள்ள வேண்டாமா?" (ஸஹீஹுல் புகாரி)

தொழுகைக்காக மஸ்ஜிதை நோக்கி வரும்போதே பதற்றமின்றி

நிதானத்துடனும் நிம்மதியுடனும் வரவேண்டும் என மார்க்கம் கட்டளையிட்டிருக்கும் நிலையில் தொழுகையின்போது எத்தகு நிதானத்தைக் கடைப்பிடிக்க வேண்டுமென்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

இமாமை முந்திச் செல்லாமலிருப்பதற்கு மார்க்க அறிஞர்கள் அழகான வழிமுறையைக் கற்றுத் தருகிறார்கள். இமாம் தக்பீர் கூறி முடிக்கும்போது மஃமூம்(களாக இருந்து அவரைப் பின்பற்றுபவர்)கள் அச்செயலை ஆரம்பிக்க வேண்டும். உதாரணமாக இமாம் 'அல்லாஹு அக்பர்' என்று முழுமையாகக் கூறி முடித்தப் பின் மஃமூம்கள் அதை நிறைவேற்ற வேண்டும்.

இது விஷயத்தில் நபித்தோழர்களின் செயல்பாடுகள் மிகத் தெளிவாக இருந்தன.

عن البراء بن عازب قال إنهم كانوا يصلون خلف رسول الله صلى الله
عليه وسلم فإذا رفع رأسه من الركوع لم أر أحدا يحني ظهره حتى يضع
رسول الله جبهته على الأرض ثم يخرمن ورائه سجدا رواه مسلم

பராஃ இப்னு ஆஸிப் (ரழி) அவர்கள் கூறுகிறார்கள்: "அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களைப் பின்தொடர்ந்து தொழும்போது நபி (ஸல்) அவர்கள் ருகூவிலிருந்து தமது தலையை உயர்த்தி நிலைக்கு வந்தபின், (தொடர்ந்து) ஸஜ்தாவில் சென்று தலையை வைத்தப் பிறகே நபித்தோழர்கள் நிலையிலிருந்து ஸஜ்தாவுக்காக குனிவார்கள்."

(ஸஹீஹ் முஸ்லிம்)

நபி (ஸல்) அவர்கள் முதுமை அடைந்து அவர்களது அசைவில் சற்று தாமதம் ஏற்பட்டபோது தமக்குப் பின்நின்று தொழுபவர்களை எச்சரித்துக் கூறினார்கள்:

عن معاوية قال سمعت النبي صلى الله عليه وسلم يقول إني قد بدنت فلا
تبادروني بالركوع والسجود

"மனிதர்களே! எனது உடல் பருமனாகி விட்டது. (அதனால் எனது செயல்களில் சற்று தாமதம் ஏற்படலாம்.) ஆகவே ருகூவு, ஸஜ்தா செய்யும்போது என்னை முந்திவிடாதீர்கள்." (ஸுனனுல் பைஹகீ)

இது விஷயத்தில் தொழ வைக்கும் இமாம்களும் பின்வரும் நபிமொழியைக் கவனத்தில் கொண்டு செயல்பட வேண்டும்.

عن أبي هريرة قال كان رسول الله صلى الله عليه وسلم إذا قام إلى الصلاة يكبر حين يقوم ثم يكبر حين يركع ثم يقول سمع الله لمن حمده حين يرفع صلبه من الركعة ثم يقول وهو قائم ربنا لك الحمد ثم يكبر حين يهوي ثم يكبر حين يسجد ثم يكبر حين يرفع رأسه يفعل ذلك في الصلاة كلها حتى يقضيها ويكبر حين يقوم من الثنتين بعد الجلوس متفق عليه

அபூஹுரைரா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் தொழுகைக்காக எழுந்திருக்கும்போது தக்பீர் சொல்வார்கள். ருகூவுக்குச் செல்லும்போது தக்பீர் சொல்வார்கள். ஸஜ்தாவுக்காக குனிந்து கொண்டிருக்கும் நிலையில் தக்பீர் சொல்வார்கள். ஸஜ்தாவிலிருந்து தலையை உயர்த்திக் கொண்டிருக்கும் நிலையில் தக்பீர் சொல்வார்கள். பின்பு ஸஜ்தாவுக்குச் சென்று கொண்டிருக்கும் நேரத்திலும் பின்பு தலையை உயர்த்திக் கொண்டிருக்கும் நேரத்திலும் தக்பீர் சொல்வார்கள். இவ்வாறே தொழுகை அனைத்திலும் செய்வார்கள். இவ்வாறே இரண்டு ரக்அத்தில் அமர்ந்து பின் (மூன்றாவது ரக்அத்துக்காக) எழுந்து கொண்டிருக்கும் நிலையிலும் தக்பீர் சொல்வார்கள். (ஸஹீஹுல் புகாரி)

இமாம் தமது அசைவுடன் இணைத்து தக்பீர் சொல்ல வேண்டும். பின் தொடர்பவர்கள் இமாமின் தக்பீர் முடியும்போது அவரைப் பின் தொடர வேண்டும். இதன் மூலமாகவே ஜமாஅத் தொழுகையை செம்மையாக நிறைவேற்றிட முடியும்.

## 16. பூண்டு வெங்காயம் போன்ற வெறுக்கத்தக்க வாடையுடன் மஸ்ஜிதுக்குள் வருவது கூடாது

يَابَنِيٓ آدَمَ خُذُواْ زِينَتَكُمْ عِندَ كُلِّ مَسْجِدٍ

ஆதமுடைய மக்களே! தொழும்போதெல்லாம் உங்களை அலங்கரித்துக் கொள்ளுங்கள்... (ஸூரா அல்அஃராஃப் 7:31)

இந்த வசனத்திலிருந்து நாம் பெறுகிற படிப்பினையாவது: ஒரு முஸ்லிம் மஸ்ஜிதுக்கு வரும்போது நல்ல, தூய்மையான ஆடையுடனும் நறுமணத்துடனும் வர வேண்டும். எனவேதான் இதற்கு மாறாக துர்நாற்றத்துடன் வருவதை நபி (ஸல்) அவர்கள் கண்டித்துள்ளார்கள்.

عن جابر أن النبي صلى الله عليه وسلم قال من أكل ثوما أو بصلاً فليعتزلنا أو قال فليعتزل مسجدنا أو ليقعد في بيته متفق عليه

ஜாபிர் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: “பூண்டு அல்லது வெங்காயத்தைச் சாப்பிட்டவர் நம்மை விட்டு விலகிக் கொள்ளட்டும். அல்லது நமது மஸ்ஜிதை விட்டு விலகி அவரது வீட்டில் உட்கார்ந்து கொள்ளட்டும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.” (ஸஹீஹுல் புகாரி)

قال رسول الله صلى الله عليه وسلم من أكل البصل والثوم والكراث

فلا يقربن مسجدنا فإن الملائكة تتأذى مما يتأذى منه بنو آدم رواه مسلم

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: “பூண்டு, உள்ளி, வெங்காயத்தைச் சாப்பிட்டவர் நமது மஸ்ஜிதை நெருங்க வேண்டாம். மனிதர்கள் சங்கடப்படும் வாடையால் மலக்குகளும் சங்கடப்படுகிறார்கள்.”

(ஸஹீஹ் முஸ்லிம்)

خطب عمر بن الخطاب يوم الجمعة فقال في خطبته ثم إنكم أيها الناس

تأكلون شجرتين لا أراهما إلا خبيثتين البصل والثوم لقد رأيت رسول الله

صلى الله عليه وسلم إذا وجد ريحهما من الرجل في المسجد أمر به

فأخرج إلى البقيع فمن أكلهما فليمتهما طبخا رواه مسلم

உமர் (ரழி) அவர்கள் ஒரு ஜுமுஆ உரையில் கூறினார்கள்: “மக்களே! நீங்கள் இரண்டு செடிகளைச் சாப்பிடுகிறீர்கள். நான் அவற்றை அருவருப்பாகக் கருதுகிறேன். அவை பூண்டும் வெங்காயமும் ஆகும். நபி (ஸல்) அவர்களை நான் பார்த்திருக்கிறேன். ஒருவரிடமிருந்து இந்த இரண்டின் வாடை வெளிப்பட்டால் அவரை மஸ்ஜிதை விட்டு வெளியேற்றி பகீஃ என்ற இடத்துக்கு அனுப்பி விடுவார்கள். யாராவது அதைச் சாப்பிடுவதாக இருந்தால் சமைத்துச் சாப்பிடட்டும்.” (ஸஹீஹ் முஸ்லிம்)

சிலர் வியர்வையில் நனைந்து விட்டு அதன் துர்நாற்றத்தை விட்டு தங்களைத் தூய்மைப்படுத்திக் கொள்ளாமல் மஸ்ஜிதுக்குள் வருகிறார்கள். அவர்களது அக்குள் மற்றும் காலுறைகளிலிருந்து வெளிப்படும் துர்நாற்றத்தால் அங்கிருப்போர் பெரும் சிரமத்திற்குள்ளாகிறார்கள். இதைவிடக் கொடுமை பீடி, சிகரேட் பிடித்துவிட்டு மஸ்ஜிதுக்குள் நுழைவதாகும். இவ்வாறு வருபவர்கள், தொழுகையாளிகளுக்கும் மலக்குகளுக்கும் துன்பத்தைக் கொடுப்பதுடன் தங்களுக்கும் தீங்கிழைத்துக் கொள்கிறார்கள்.

## 17. அன்னியப் பெண்ணை வேண்டுமென்றே பார்ப்பது குற்றம்

அல்லாஹ் கூறுகிறான்:

قُل لِّلْمُؤْمِنِينَ يَغُضُّوا۟ مِنْ أَبْصَٰرِهِمْ وَيَحْفَظُوا۟ فُرُوجَهُمْ ذَٰلِكَ أَزْكَىٰ لَهُمْ إِنَّ ٱللَّهَ خَبِيرٌۢ بِمَا يَصْنَعُونَ

(நபியே!) நம்பிக்கையாளர்களான ஆண்களுக்கு நீங்கள் கூறுங்கள்: அவர்கள் தங்கள் பார்வையைக் கீழ்நோக்கியே வைக்கட்டும். அவர்கள் தங்கள் கற்பையும் காத்துக் கொள்ளட்டும். இது அவர்களைப் பரிசுத்தமாக்கி வைக்கும். நிச்சயமாக அல்லாஹ் அவர்கள் செய்பவற்றை நன்கறிந்து கொள்கிறான். (ஸூரா அந்நூர் 24:30)

قال النبي صلى الله عليه وسلم فزنا العين النظر رواه البخاري

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "கண்ணின் விபசாரம் என்பது பார்வையாகும்." (ஸஹீஹுல் புகாரி)

அதாவது, அல்லாஹ் பார்க்கக் கூடாது என்று தடுத்திருப்பதைப் பார்ப்பது கண்ணினால் விபசாரம் செய்வதாகும்.

மணமுடிப்பதற்காக பெண் பேசுபவர், மருத்துவர் போன்றவர்கள் பார்ப்பது அனுமதிக்கப்பட்டதாகும்.

ஒரு பெண் ஆணை மயக்கும் விதமாகப் பார்ப்பதும் ஹராமாகும்.

وَقُل لِّلْمُؤْمِنَاتِ يَغْضُضْنَ مِنْ أَبْصَارِهِنَّ وَيَحْفَظْنَ فُرُوجَهُنَّ

(நபியே!) நம்பிக்கை கொண்ட பெண்களுக்கும் நீங்கள் கூறுங்கள்: அவர்களும் தங்கள் பார்வையைக் கீழ்நோக்கியே வைத்து தங்கள் கற்பையும் காத்துக் கொள்ளட்டும். (ஸூரா அந்நூர் 24:31)

சில ஆண்கள், சிறுவர்களை இச்சையின் கண் கொண்டு பார்க்கின்றனர். இது மாபெரும் குற்றமாகும். ஆண்களில் ஒருவர் மற்றவரை இச்சையுடன் பார்ப்பதும், பெண்களில் ஒருவர் மற்றவரை இச்சையுடன் பார்ப்பதும் தடுக்கப்பட்ட குற்றமாகும். ஓர் ஆண் மற்றோர் ஆணின் மறைவிடத்தைப் பார்ப்பதும், ஒரு பெண் மற்றொரு பெண்ணின் மறைவிடத்தைப் பார்ப்பதும் மார்க்கத்தில் தடுக்கப்பட்டதாகும்.

சிலர் பத்திரிகைகளிலும் சினிமாவிலும் வருகிற உருவத்தை "அது நிழல்தான் நிஜமல்ல" என்று கூறி அதைப் பார்க்கிறார்கள். ஆனால் இதில் இச்சை ஏற்படுவதும் சலனம் உருவாவதும் வெளிப்படையானதே. ஆதலால் இதுவும் தடை செய்யப்பட்டதாகும்.

## 18. அன்னியப் பெண்களிடம் கை குலுக்குவது குற்றம்

அன்னியப் பெண்களின் கைகளைப் பிடித்து முஸாஃபஹா செய்வது

(குலுக்குவது) இன்றைய சமூகத்தில் வாழும் நம்மில் சிலரிடம் காணப்படுகிற வரம்பு மீறிய செயலாகும். இது விஷயத்தில் அல்லாஹ்வின் கட்டளை புறக்கணிக்கப்பட்டு, வழிகெட்ட - கண்மூடித்தனமான பழக்கங்களே பின்பற்றப்படுகின்றன. இந்நிலையில் மார்க்கச் சட்டங்களைக் கூறி இவற்றைக் கண்டிப்பவர்களைப் பிற்போக்குவாதிகள், இரத்த பந்துக்களைத் துண்டிப்பவர்கள், வீண் சந்தேகங்களை ஏற்படுத்துபவர்கள் என்றெல்லாம் விமர்சிக்கிறார்கள். பெரிய தந்தை மற்றும் சிறிய தந்தையின் மகள், சகோதரனின் மனைவி, தந்தையின் சகோதரர்களின் மனைவி, மாமாவின் மனைவி போன்ற (திருமணம் செய்ய நிரந்தரத் தடையில்லாத) பெண்களுடன் முஸாஃபஹா செய்வது, அவர்களைத் தொட்டுப் பேசுவது நமது சமூகத்தில் வெகு சாதாரணமாகிவிட்டது.

இச்செயல் தீய பின்விளைவுகளை ஏற்படுத்துவதுடன் மிக கடுமையாகக் கண்டிக்கப்பட்ட குற்றமுமாகும்.

قال رسول الله صلى الله عليه وسلم لأن يطعن في رأس أحدكم بمخيط

من حديد خير له من أن يمس امرأة لا تحل له رواه الطبراني

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "இரும்பினாலான ஊசியால் உங்களில் ஒருவருடைய தலையில் குத்துவது, அவருக்கு அனுமதியில்லாத பெண்ணைத் தொடுவதைவிட அவருக்குச் சிறந்ததாகும்.'' (முஃஜமுத் தப்ரானி)

கை கொடுத்துக் குலுக்கிக் கொள்வது கையினால் செய்யப்படும் விபசாரம் என மார்க்கம் கூறுகிறது.

قال النبي صلى الله عليه وسلم العينان تزنيان والرجلان تزنيان والفرج يزني

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: இரு கண்கள் விபசாரம் செய்கின்றன. இரு கைகளும் விபசாரம் செய்கின்றன. இரு கால்களும் விபசாரம் செய்கின்றன. மறைவிடமும் விபசாரம் செய்கிறது. (முஸ்னது அஹ்மது)

நபி (ஸல்) அவர்களைவிட தூய உள்ளமுடையவர் வேறு எவரேனும் இருக்க முடியுமா? அவர்களே தங்களைப் பற்றிக் கூறுகிறார்கள்:

قال رسول الله صلى الله عليه وسلم إني لا أصافح النساء رواه أحمد

"நிச்சயமாக நான் (அன்னியப்) பெண்களிடம் முஸாஃபஹா செய்ய மாட்டேன் (கை கொடுக்க மாட்டேன்)." (முஸ்னது அஹ்மது)

عن عائشة قالت ولاوالله ما مست يد رسول الله صلى الله عليه وسلم

يد امرأة قط غير أنه يبايعهن بالكلام رواه مسلم

அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வின் மீது ஆணையாக! நபி (ஸல்) அவர்களின் கரம் எந்தவொரு பெண்ணின் கரத்தையும் தொட்டதேயில்லை. வார்த்தையால் மட்டுமே அவர்கள் வாக்குப் பிரமாணம் (பைஅத்) வாங்கினார்கள். (ஸஹீஹ் முஸ்லிம்)

சிலர் ஒழுக்கமான தங்களது மனைவியர் தங்களுடைய சகோதரர்கள், உறவு ஆண்கள், நண்பர்களுடன் கை குலுக்கவில்லை என்பதற்காக அந்த அப்பாவிப் பெண்களை தலாக் (விவாகரத்து) செய்யவும் துணிந்துவிடுகிறார்கள். இவர்கள் அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ள வேண்டாமா?

## 19. அன்னியப் பெண்களுடன் தனித்திருப்பது குற்றம்

மனிதர்களை வழிகெடுப்பதில் ஷைத்தான் மிகுந்த பேராசையுடையவன். அவனது சூழ்ச்சியில் நாம் சிக்கிவிடக் கூடாது என அல்லாஹ் எச்சரிக்கின்றான்:

يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوا۟ لَا تَتَّبِعُوا۟ خُطُوَٰتِ ٱلشَّيْطَٰنِ ۚ وَمَن يَتَّبِعْ خُطُوَٰتِ ٱلشَّيْطَٰنِ فَإِنَّهُۥ يَأْمُرُ بِٱلْفَحْشَآءِ وَٱلْمُنكَرِ

நம்பிக்கையாளர்களே! ஷைத்தானுடைய அடிச்சுவட்டை நீங்கள் பின்பற்றாதீர்கள். (ஏனென்றால்) எவன் ஷைத்தானுடைய அடிச்சுவட்டைப் பின்பற்றிச் செல்கிறானோ அவனை, அவன் மானக்கேடான விஷயங்களையும் பாவமான காரியங்களையும் செய்யும்படி நிச்சயமாகத் தூண்டிக் கொண்டேயிருப்பான். (ஸூரா அந்நூர் 24:21)

ஷைத்தான் ரத்த நாளங்களில் எல்லாம் ஊடுருவி ஓடிக் கொண்டிருக்கிறான்; மனிதனை வீழ்த்துவதற்கான வழிகளைத் தேடிக் கொண்டிருக்கிறான். அதில் ஒன்றுதான், அன்னியப் பெண்களுடன் அவன் நம்மைத் தனித்திருக்கச் செய்வதாகும். இதனால் பல தீமைகள் ஏற்படுகின்றன. அத்தீமைகளின் அனைத்து வழிகளையும் இஸ்லாம் இச்செயலுக்குத் தடை விதிப்பதின் மூலம் முற்றிலுமாக அடைத்துவிட்டது.

قال رسول الله صلى الله عليه وسلم لا يخلون رجل بامرأة إلا كان

ثالثهما الشيطان

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: ஓர் ஆண், (அன்னியப்) பெண்ணுடன் தனித்திருந்தால் அங்கு நிச்சயமாக மூன்றாமவனாக ஷைத்தான் இருக்கின்றான்.

(ஸுனனுத் திர்மிதி)

قال رسول الله صلى الله عليه وسلم لا يدخلن رجل بعد يومي هذا على مغيبة إلا ومعه رجل أورجلان رواه مسلم

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக இப்னு உமர் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: எனது இன்றைய நாளிற்குப் பிறகு எந்தவொரு மனிதனும் அவனுடன் ஒன்று அல்லது இரண்டு ஆண்கள் இணைந்தே தவிர கணவன் வீட்டில் இல்லாத பெண்ணிடம் செல்ல வேண்டாம்.

(ஸஹீஹ் முஸ்லிம்)

மனைவியின் சகோதரிகள், உடன் ஊழியம் செய்யும் பெண்கள், வேலைக்காரப் பெண்கள், அண்டை வீட்டுப் பெண்கள், திருமணம் செய்ய நிரந்தரத் தடையற்ற பெண்கள் போன்ற அன்னியப் பெண்கள் எவருடனும் ஓர் ஆண் வீட்டிலோ வாகனத்திலோ பயணத்திலோ தனிமையில் இருப்பது தடை செய்யப்பட்டதாகும்.

பெரும்பாலானவர்கள் இது விஷயத்தில் அலட்சியமாக இருக்கின்றார்கள். அதன் விளைவாக இழிவான செயல்களில் வீழ்ந்து தந்தை பெயர் தெரியாத குழந்தைகள் பெருகிவிடும் விபரீதத்துக்கு வித்திடுகிறார்கள்.

## 20. விபசாரம் செய்வது குற்றம்

மனித குலத்தின் கவுரவத்தையும் மனித சந்ததிகளையும் பாதுகாக்கும் நோக்கத்தில் மார்க்கம் விபசாரத்தைத் தடை செய்திருக்கிறது.

وَلَا تَقْرَبُوا۟ ٱلزِّنَىٰٓ ۖ إِنَّهُۥ كَانَ فَٰحِشَةً وَسَآءَ سَبِيلًا

(நம்பிக்கையாளர்களே!) நீங்கள் விபசாரத்திற்கு நெருங்கவும் வேண்டாம். ஏனென்றால், நிச்சயமாக அது மானக்கேடாகவும் தீயவழியாகவும் இருக்கின்றது. (ஸூரா பனீஇஸ்ராயீல் 17:32)

பெண்கள் தங்களது உடலை முழுமையாக மறைத்து பர்தாவைப் பேண வேண்டும்; தங்களின் பார்வையைத் தாழ்த்திக் கொள்ள வேண்டும்; அன்னிய ஆண்களுடன் தனித்திருக்கக் கூடாது என்று கட்டளையிட்டு விப்சாரத்திற்குத் தூண்டுகோலாக அமையும் அனைத்து வழிகளையும் இஸ்லாம் முழுமையாக அடைத்துவிட்டது.

திருமணமாகிவிட்ட பிறகும் ஒருவன் விபசாரம் செய்தால் அவன் மிகக் கேவலமான, கொடுமையான தண்டனைக்குரியவன் என இஸ்லாம் தீர்ப்பளிக்கிறது. அவனது உடலின் ஒவ்வோர் அங்கமும் ஹராமான முறையில் சுகம் அனுபவித்தது போலவே அவனது உடலின் ஒவ்வோர் அங்கமும் வேதனையடையும் விதமாக அவன் கல்லால் எறிந்து

கொல்லப்பட வேண்டும்.

திருமணமாகாத நிலையில் விபசாரம் செய்த ஆணுக்கும் பெண்ணுக்கும் நூறு கசையடிகள் தண்டனையாகக் கொடுக்கப்படும். அத்தண்டனையின் இழிவை ஏனைய மக்களும் புரிந்து கொள்வதற்காக திரளான மக்கள் முன்னிலையில் கசையடி வழங்கப்படும். குற்றவாளி அந்தப் பகுதியிலிருந்து ஒரு வருடத்திற்கு வெளியேற்றப்பட வேண்டும்.

விபசாரம் செய்த ஆண்களும் பெண்களும் அவர்களின் மண்ணறையில் அடிப்பகுதி விசாலமாகவும் மேல் பகுதி குறுகியதாகவும் அமைந்த அடுப்பில் நிர்வாணமாகப் போடப்பட்டு எரிக்கப்படுவார்கள். அதற்குள் நெருப்பு மூட்டப்படும்; உடனே அவ்விபசாரர்கள் ஓலமிட்டவர்களாக அதிலிருந்து வெளியேறிவிட மேலேறி வருவார்கள். அப்போது அந்த நெருப்பு அணைக்கப்படும். உடனே கீழிறங்குவார்கள். இவ்வாறே மறுமை நாள்வரையிலும் தண்டிக்கப்படுவார்கள்.

விபசாரத்திலேயே நீடித்திருந்து, வயோதிகமடைந்தும் அதைத் தொடர்பவனுக்கு மறுமை நாளில் மிகக் கொடூரமான தண்டனை விதிக்கப்படும்.

عن أبي هريرة قال قال رسول الله صلى الله عليه وسلم ثلاثة لا يكلمهم
الله يوم القيامة ولا يزكيهم وفي رواية ولا ينظر إليهم ولهم عذاب أليم
شيخ زان وملك كذاب وعائل مستكبر رواه مسلم

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: "மூன்று நபர்கள் (இருக்கின்றார்கள்), அவர்களுடன் அல்லாஹ் மறுமை நாளில் பேச மாட்டான். அவர்களுக்கு நோவினை தரும் வேதனை உண்டு. அவர்கள்தாம் விபசாரம் செய்யும் வயோதிகன், பொய் பேசும் ஆட்சியாளன், பெருமையடிக்கும் ஏழை."

(ஸஹீஹ் முஸ்லிம்)

"விபசாரத்தின் மூலம் பொருளீட்டுவது மிகக் கெட்ட சம்பாத்தியம்" என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். வானத்தின் கதவுகள் திறக்கப்பட்டு பிரார்த்தனைகள் அங்கீகரிக்கப்படும் நடுநிசியில் விபசாரம் செய்வோருடைய பிரார்த்தனையை மட்டுமே அல்லாஹ் அங்கீகரிப்பதே இல்லை என்ற கருத்துடைய நபிமொழி ஸுனனுத் திர்மிதியில் இடம் பெற்றுள்ளது.

இக்காலத்தில் மானக்கேடான செயல்கள் அதிகரித்துவிட்டன. ஷைத்தானும் அவனது தோழர்களும் பாவத்தின் வழிகளை மக்களுக்கு

இலகுவாக்கி விட்டனர். ஷைத்தானின் அடிச்சுவட்டைப் பின்பற்றுபவர்களால் ஆபாசமும் அசிங்கங்களும் பரவலாகி விட்டன. பார்வை படும் இடங்களிலெல்லாம் ஆபாசமே காட்சியளிக்கிறது. பெண்கள், ஆண்களுடன் கலந்துறவாடுவது பெருகிவிட்டன. ஆபாசப் பத்திரிகைகளும் சினிமாக்களும் அதிகரித்து விட்டன. பாவச் செயல்கள் நடக்கும் பகுதிகளை நோக்கி மக்கள் கூட்டம் கூட்டமாக விரைகின்றனர்.

இதன் விளைவென்ன? மனிதகுல மாண்புகள் தகர்க்கப்பட்டு தந்தை பெயர் தெரியாத குழந்தைகளின் எண்ணிக்கை அதிகரித்து வருகிறது. விபசாரத்தால் உருவாகும் சிசுக்கள் கருவிலேயே கொல்லப்படுகின்றன.

அல்லாஹ்வே! உனது எல்லையில்லாக் கருணையால் எங்களை மன்னித்து இந்த வெட்கங்கெட்ட செயல்களை விட்டு எங்களைக் காப்பாயாக! எங்கள் உடல் உறுப்புகளையும் உள்ளத்தையும் தூய்மைப்படுத்தி, தடுக்கப்பட்ட காரியங்களை விட்டு எங்களைப் பாதுகாப்பாயாக!

## 21. ஓரினச் சேர்க்கையில் ஈடுபடுவது குற்றம்

நபி லூத் (அலை) அவர்களது சமுதாயத்தினர் ஓரினச் சேர்க்கை எனும் கொடூரமான பாவச்செயலைச் செய்து கொண்டிருந்தார்கள்.

அல்குர்ஆன் கூறுகிறது:

وَلُوطًا إِذْ قَالَ لِقَوْمِهِ إِنَّكُمْ لَتَأْتُونَ ٱلْفَاحِشَةَ مَا سَبَقَكُمْ بِهَا مِنْ أَحَدٍ مِّنَ ٱلْعَالَمِينَ أَئِنَّكُمْ لَتَأْتُونَ ٱلرِّجَالَ

லூத்தையும் (நம்முடைய தூதராக அவருடைய மக்களிடம் அனுப்பி வைத்தோம்). அவர் தம் மக்களை நோக்கி, "உங்களுக்கு முன்னர் உலகில் (மனிதர்களில்) ஒருவருமே செய்திராத மானக்கேடான ஒரு காரியத்தை நிச்சயமாக நீங்கள் செய்கிறீர்கள். (பெண்களை விட்டு) ஆண்களிடம் (மோகம் கொண்டு) செல்கிறீர்கள். (ஸூரா அல்அன்கபூத் 29:28,29)

மனிதகுல மாண்புகளைத் தகர்த்தெறியும் இந்தக் கொடிய செயலுக்காக நான்கு விதமான தண்டனைகளை இறக்கி அல்லாஹ் அவர்களைத் தண்டித்தான்.

1) கண்கள் குருடாக்கப்பட்டன, 2) பூமி தலைகீழாகப் புரட்டப்பட்டது, 3) அவர்கள் மீது கல் மழை பொழியப்பட்டது, 4) பயங்கரமான சப்தத்தால் சோதிக்கப்பட்டார்கள்.

இருவரும் ஒருக்கொருவர் சம்மதித்து ஓரினச் சேர்க்கை செய்திருந்தால் அவ்விருவரும் கொல்லப்பட வேண்டுமென்பது மார்க்கத் தீர்ப்பாகும்.

عن ابن عباس مرفوعا من وجدتموه يعمل عمل قوم لوط فاقتلوا الفاعل والمفعول به رواه الخمسة إلا النسائي

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: "ஒருவன் நபி லூத் (அலை) அவர்களுடைய சமுதாயத்தினரின் செயலை செய்வதை நீங்கள் கண்டால் செய்பவனையும் செய்யப்படுபவனையும் கொன்று விடுங்கள்." (ஸுனன் அபூதாவூது)

## 22. தகுந்த காரணமின்றி மனைவி கணவனின் படுக்கைக்கு வர மறுப்பது குற்றம்

عن أبي هريرة قال قال رسول الله صلى الله عليه وسلم إذا دعا الرجل امرأته إلى فراشه فأبت فبات غضبان لعنتها الملائكة حتى تصبح متفق عليه

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: "ஒரு மனிதர் தமது மனைவியை படுக்கைக்கு அழைக்கும்போது அவள் வரமறுத்து, அவள் மீது அவர் கோபத்துடன் இரவைக் கழிப்பாரானால் அவளை வானவர்கள் விடியும்வரை சபிக்கிறார்கள்." (ஸஹீஹுல் புகாரி)

கணவன் மனைவியிடையே மனக்கசப்பு ஏற்படும்போது பெரும்பாலான பெண்கள் கணவனின் உரிமைக்கு மதிப்பளிப்பதில்லை. இதன் விளைவாக கணவன் தீமையில் வீழ்ந்து விடுவதற்கான வாய்ப்புகள் உருவாகின்றன. அவளும் துன்பத்தை அனுபவிக்கிறாள்.

قال رسول الله صلى الله عليه وسلم إذا دعا الرجل امرأته إلى فراشه فلتجب وإن كانت على ظهر قتب

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "ஒருவர் தம் மனைவியைத் தமது படுக்கைக்கு அழைப்பாரானால் அவள் உடனடியாக (அவரின் அழைப்பை) ஏற்க வேண்டும். அவள் ஒட்டகத்துடைய அம்பாரத்தின் மீதிருந்தாலும் சரியே!" (முஸ்னது அல்பஸ்ஸார்)

மனைவியை அழைக்கும் கணவுன், மனைவியின் உடல் நலம், கர்ப்பக் காலம், பலவீனம், மனநிலை போன்றதைக் கவனத்தில் கொள்வது அவசியமாகும். அப்போதுதான் அவர்களிடையே பிளவுகள் தோன்றுவது தவிர்க்கப்பட்டு நல்லுறவு பலப்படும்.

## 23. தக்க காரணமின்றி மனைவி கணவனிடமிருந்து விவாகரத்து கோருவது குற்றம்

இன்று சின்ன சின்ன கருத்து வேறுபாடுகளுக்குக் கூட கணவனிடம்

விவாகரத்துக் கோரும் பெண்களின் எண்ணிக்கை அதிகரித்து வருகிறது. தான் விரும்பியவாறெல்லாம் தன் கணவன் செலவழிப்பதில்லை என்பதைக் கூட சில பெண்கள் காரணம் காட்டுகிறார்கள்.

சில பெண்கள் தங்களுடைய உறவினர்களும் அண்டை வீட்டுப் பெண்களும் ஏற்படுத்தி விடுகிற குழப்பங்களால் தூண்டப்படுகிறார்கள். 'நீ ஓர் ஆண்மகனாக இருந்தால் என்னைத் தலாக் செய்துவிடு' என்பது போன்ற, கணவனின் ரோஷத்தைத் தூண்டும்படியான வார்த்தைகளாலும் விவாகரத்தைக் கோருகிறார்கள்.

ஆனால் 'தலாக்' என்பதோ ஏராளமான விபரீதங்களுக்கு வித்திடுகிறது. குடும்பங்கள் பிளவுபட்டு குழந்தைகள் சிதறிவிடுகிறார்கள். அதன் பாதிப்புகள் ஒவ்வொன்றாக வெளிப்படும்போது, விவாகரத்து கோரியவர்கள் பெரிதும் கைசேதப்படுவார்கள். எனினும் அப்போது எந்தப் பலனுமில்லை. விவாகரத்து கோரிப் பெறுவதை இஸ்லாம் பெரும் குற்றமாக விதித்ததற்கு இதுவே காரணமாகும்.

قال رسول الله صلى الله عليه وسلم أيما امرأة سألت زوجها الطلاق من غير ما بأس فحرام عليها رائحة الجنة رواه الخمسة إلا النسائي

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக ஸவ்பான் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: "தகுந்த காரணங்கள் எதுவுமின்றி கணவனிடமிருந்து தலாக் கோரும் பெண்ணுக்குச் சுவர்க்கத்தின் வாடை 'ஹராம்' ஆக்கப்படும்."

(முஸ்னது அஹ்மது)

قال رسول الله صلى الله عليه وسلم إن المختلعات والمنتزعات هن المنافقات

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக உக்பா இப்னு ஆமிர் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: "கணவனிடமிருந்து பிரிவினை கோரும் பெண்களும் கணவனை விட்டு விலகி வாழும் பெண்களும் நயவஞ்சகப் பெண்களாவர்."

(முஃஜமுத் தப்ரானி)

மார்க்கம் தொடர்பான காரணங்களுக்காக கணவனுடனான வாழ்க்கை ஒப்பந்தத்தை முறித்துக் கொள்வது தவறாகாது.

கணவன் தொழுவதில்லை, போதைப் பொருட்களைப் பயன்படுத்துகிறான், மார்க்கத்தில் விலக்கப்பட்ட செயலைச் செய்யுமாறு மனைவியை நிர்ப்பந்திக்கிறான், மனைவியைக் கொடுமைப்படுத்துகிறான், மனைவிக்குச் செய்ய வேண்டிய கடமைகளை முறையாக நிறைவேற்றுவதில்லை போன்றவை தகுந்த காரணங்களாகும். அவனுக்குச் செய்யப்படும் உபதேசங்கள் பயனளிக்கவில்லை; அவனைத் திருத்த மனைவி எடுத்த முயற்சிகளும் பயனற்றுவிட்டன என்ற நிலையில் தமது

உயிரையும் மார்க்கத்தையும் பேணிக்கொள்ளும் நோக்கில் அந்தக் கணவனிடமிருந்து விவாகரத்துக் கோருவது அப்பெண் மீது குற்றமாகாது.

## 24. (ளிஹார் ) மனைவியைத் தாயுடன் ஒப்பிடுவது குற்றம்

ஒருவர் தமது மனைவியை நோக்கி "எனக்கு என் சகோதரி (திருமணம் செய்துகொள்ள) ஹராமானது போல நீயும் ஹராமாகிவிட்டாய்" என சத்தியம் செய்தாலோ, "நீ என் தாயைப் போன்று இருக்கிறாய்" போன்ற வார்த்தைகளைக் கூறினாலோ அதற்கு 'ளிஹார்' எனப்படும். இது அறியாமைக் கால மக்களிடையே விவாகரத்திற்கு இருந்த நடைமுறைகளில் ஒன்றாகும்.

ٱلَّذِينَ يُظَاهِرُونَ مِنكُمْ مِّن نِّسَآئِهِمْ مَّا هُنَّ أُمَّهَاتِهِمْ إِنْ أُمَّهَاتُهُمْ إِلاَّ ٱللاَّئِي وَلَدْنَهُمْ وَإِنَّهُمْ لَيَقُولُونَ مُنكَراً مِّنَ ٱلْقَوْلِ وَزُوراً وَإِنَّ ٱللَّهَ لَعَفُوٌّ غَفُورٌ

உங்களில் எவரேனும் தம் மனைவிகளில் எவளையும் தம்முடைய தாய் என்று கூறிவிடுவதனால் அவள் அவர்களுடைய (உண்மைத்) தாயாகி விடமாட்டாள். அவர்களைப் பெற்றெடுத்தவர்கள்தாம் (உண்மைத்) தாயாவார்கள். (இதற்கு மாறாக எவளையும் எவரும் தாயென்று கூறினால், கூறுகின்ற) அவர்கள் நிச்சயமாகத் தகாததும் பொய்யானதுமான ஒரு வார்த்தையையே கூறுகின்றனர். நிச்சயமாக அல்லாஹ் மிக்க மன்னிப்பவனும் (குற்றங்களைப்) பொறுப்பவனுமாக இருக்கின்றான்.

(ஸூரா அல்முஜாதலா 58:2)

அந்த அறியாமைக் கால மக்களிடம் காணப்பட்ட இந்த நடைமுறை பெண்களுக்கு பெரும் அநீதி இழைப்பதாக இருந்தது. எனவே இஸ்லாம், பெரிய குற்றங்களான தவறாகக் கொலை செய்வது, ரமழான் மாதத்தின் பகலில் மனைவியுடன் உறவு கொள்வது போன்ற தவறுகளுக்கு உரிய குற்றப் பரிகாரத்தைப் போன்றே 'ளிஹாரு'க்கும் விதியாக்கியுள்ளது. அதை நிறைவேற்றாதவரை அவர் தம் மனைவியிடம் உறவு கொள்ள கூடாது.

وَٱلَّذِينَ يُظَاهِرُونَ مِن نِّسَآئِهِمْ ثُمَّ يَعُودُونَ لِمَا قَالُواْ فَتَحْرِيرُ رَقَبَةٍ مِّن قَبْلِ أَن يَتَمَآسَّا ذَلِكُمْ تُوعَظُونَ بِهِ وَٱللَّهُ بِمَا تَعْمَلُونَ خَبِيرٌ فَمَن لَّمْ يَجِدْ فَصِيَامُ شَهْرَيْنِ مُتَتَابِعَيْنِ مِن قَبْلِ أَن يَتَمَآسَّا فَمَن لَّمْ يَسْتَطِعْ فَإِطْعَامُ سِتِّينَ مِسْكِيناً ذَلِكَ لِتُؤْمِنُواْ بِٱللَّهِ وَرَسُولِهِ وَتِلْكَ حُدُودُ ٱللَّهِ وَلِلْكَافِرِينَ عَذَابٌ أَلِيمٌ

ஆகவே, எவரேனும் தங்கள் மனைவிகளை(த் தம்) தாய்க்கு ஒப்பிட்டுக் கூறிய பின்னர், அவர்களிடம் திரும்ப (சேர்ந்து கொள்ள) விரும்பினால்

அவ்விருவரும் ஒருவரை ஒருவர் தொடுவதற்கு முன்னதாகவே (இவ்வாறு ஒப்பிட்டுக் கூறிய குற்றத்திற்குப் பரிகாரமாக) ஓர் அடிமையை விடுதலை செய்ய வேண்டும். இதனை (அல்லாஹ்) உங்களுக்கு உபதேசம் செய்கின்றான். அல்லாஹ் நீங்கள் செய்பவற்றை நன்கறிபவனாக இருக்கின்றான்.

(விடுதலை செய்யக் கூடிய அடிமையை) எவரேனும் பெற்றிருக்காவிடில் அவ்விருவரும் ஒருவரை ஒருவர் தொடுவதற்கு முன்னதாகவே (அவன்) இரண்டு மாதங்கள் தொடர்ச்சியாக நோன்பு நோற்கட்டும். (இவ்வாறு நோன்பு நோற்க) சக்தி பெறாதவன் அறுபது ஏழைகளுக்கு (நடுத்தரமான) உணவளிக்கட்டும். அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் நீங்கள் (மெய்யாகவே) நம்பிக்கை கொண்டிருக்கிறீர்கள் என்பதற்காக இவை அல்லாஹ் ஏற்படுத்திய வரம்புகளாகும். (இதனை) மீறுபவர்களுக்கு துன்புறுத்தும் வேதனை உண்டு. (ஸூரா அல்முஜாதலா 58:3,4)

## 25. மாதவிடாய் காலத்தில் மனைவியுடன் உறவு கொள்வது குற்றம்

அல்லாஹ் கூறுகிறான்:

وَيَسْأَلُونَكَ عَنِ الْمَحِيضِ قُلْ هُوَ أَذًى فَاعْتَزِلُوا النِّسَاءَ فِي الْمَحِيضِ وَلَا تَقْرَبُوهُنَّ حَتَّىٰ يَطْهُرْنَ

(நபியே!) மாதவிடாயைப் பற்றியும் உங்களிடம் அவர்கள் கேட்கின்றார்கள். நீங்கள் கூறுங்கள்: அது (அசுத்தமான) ஓர் இடையூறு. எனவே, மாதவிடாய்க் காலத்தில் பெண்களை விட்டு விலகி, அவர்கள் சுத்தமாகும் வரையில் அணுகாதீர்கள்.... (ஸூரா அல்பகறா 2:222)

மாதவிடாயை விட்டுத் தூய்மையாகி குளிக்கும் வரை மனைவியிடம் உறவு கொள்வது ஹராமாகும்.

فَإِذَا تَطَهَّرْنَ فَأْتُوهُنَّ مِنْ حَيْثُ أَمَرَكُمُ اللَّهُ

... சுத்தமாகிவிட்டால் அல்லாஹ் உங்களை ஏவிய முறைப்படி அவர்களிடம் செல்லுங்கள். நிச்சயமாக அல்லாஹ் (பாவத்தை விட்டு) வருத்தப்பட்டு மீளுகிறவர்களையும் பரிசுத்தவான்களையும் விரும்புகின்றான். (ஸூரா அல்பகறா 2:222)

இது எத்தகு இழி செயல் என்பதைப் பின்வரும் நபிமொழி விவரிக்கிறது.

قال رسول الله صلى الله عليه وسلم من أتى حائضا أو امرأة في دبرها أو كاهنا فقد كفر بما أنزل على محمد رواه الترمذي وابن ماجه

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: மனைவி மாதவிடாயுள்ள நிலையிலோ, மனைவியின் பின்துவாரத்திலோ புணருபவனும், சோதிடனிடம் செல்பவனும் முஹம்மதின் மீது இறக்கப்பட்டதை நிராகரித்தவனாவான். (ஸுனனுத் திர்மிதி)

தம் மனைவி மாதவிடாயில் இருப்பதை அறியாமல் எவரேனும் இச்செயலைச் செய்தால் அவருக்குத் தண்டனை எதுவுமில்லை. ஒருவர் தெரிந்து வேண்டுமென்றே செய்தால் ஒரு தீனாரையோ அரை தீனாரையோ குற்றப் பரிகாரமாக தர்மம் செய்ய வேண்டும். ஒரு தீனார் என்பது 4.25 கிராம் தங்கமாகும்; அல்லது அதன் மதிப்புள்ள கிரயமாகும்.

## 26. மனைவியின் பின்துவாரத்தில் உறவு கொள்வது குற்றம்

இறைநம்பிக்கையில் பலவீனமுள்ள சிலர், தம் மனைவியின் பின்புறத் துவாரத்தில் உறவு கொள்வதைக் குற்றமாகக் கருதுவதில்லை. ஆனால், இது பெரும்பாவமாகும். இச்செயலைச் செய்பவர்களை நபி (ஸல்) அவர்கள் சபித்துள்ளார்கள்.

قال رسول الله صلى الله عليه وسلم ملعون من أتى امرأة في دبرها

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: மனைவியின் பின் துவாரத்தில் புணருபவன் சபிக்கப்பட்டவனாவான். (முஸ்னது அஹ்மது)

قال رسول الله صلى الله عليه وسلم من أتى حائضا أو امرأة في دبرها أو

كاهنا فقد كفر بما أنزل على محمد رواه الترمذي وابن ماجه

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: மனைவி மாதவிடாயுள்ள நிலையிலோ, மனைவியின் பின்துவாரத்திலோ புணருபவனும், சோதிடனிடம் செல்பவனும் முஹம்மதின் மீது இறக்கப்பட்டதை நிராகரித்தவனாவான். (ஸுனனுத் திர்மிதி)

இந்த ஒழுக்கக் கேடான செயல்கள் பல குடும்பங்களில் பிரச்சினைகளை உண்டுபண்ணுகின்றன. நன்னடத்தையுடைய பெண்கள் இந்தத் தவறான உறவுக்கு உடன்படாமையால் தலாக்கை நோக்கி தள்ளப்படுகின்றனர். சிலர் தங்களது மனைவி இந்த விஷயம் குறித்த மார்க்க நிலையை அறிஞர்களிடம் கேட்க மாட்டாள் என்ற துணிச்சலில் அது மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்டது என்ற எண்ணத்தை விதைக்கின்றனர். அதற்கு,

نِسَآؤُكُمْ حَرْثٌ لَّكُمْ فَأْتُوا۟ حَرْثَكُمْ أَنَّىٰ شِئْتُمْ

"உங்கள் மனைவிகள் உங்கள் விளை நிலங்கள். ஆகவே உங்கள் விளை நிலங்களுக்கு நீங்கள் விரும்பியவாறு சென்று உங்களுடைய பிற்காலத்திற்கு (வேண்டிய சந்ததியைத்) தேடிக் கொள்ளுங்கள்"

(ஸூரா அல்பகறா 2:223)

என்ற இறைவசனத்தை ஆதாரமாகக் கொள்கின்றனர். ஆனால் இவ்வசனத்தின் பொருளை விவரிக்கும் நபிமொழிகள், முன்புறமாகவோ பின்புறமாகவோ புணர்ந்தாலும் குழந்தை பெறுவதற்கான வழியில்தான் புணர வேண்டுமெனத் தெளிவுபடுத்துகின்றன. குழந்தை பெற்றெடுப்பதற்கான பாதை மலம் கழிக்கும் பாதையல்ல என அனைவரும் அறிவோம். இந்நிலையில் தூய்மையான இல்லறத்தில் அறியாமைக் கால இழிசெயல்களைப் பின்பற்றுவது மார்க்கத்திற்கு எதிரானதாகும். அச்செயலுக்கு மனைவி உடன்பட்டாலும் ஹராமாகவே ஆகும். ஏனென்றால், தவறு செய்யும் விஷயத்தில் உடன்படுவதால் ஹராமான எந்தச் செயலும் அனுமதிக்கப்பட்டதாகி விடாது.

## 27. மனைவிகளுக்கு மத்தியில் பாரபட்சம் காட்டுவது குற்றம்

ஒன்றுக்கு மேற்பட்ட பெண்களை மணந்தவர் அவர்களிடையே சமத்துவம் பேண வேண்டுமென அல்லாஹ் கட்டளையிடுகிறான்.

وَلَن تَسْتَطِيعُوٓاْ أَن تَعْدِلُواْ بَيْنَ ٱلنِّسَآءِ وَلَوْ حَرَصْتُمْ فَلَا تَمِيلُواْ كُلَّ ٱلْمَيْلِ
فَتَذَرُوهَا كَٱلْمُعَلَّقَةِ وَإِن تُصْلِحُواْ وَتَتَّقُواْ فَإِنَّ ٱللَّهَ كَانَ غَفُورًا رَّحِيمًا

(நம்பிக்கையாளர்களே! உங்களுக்கு பல மனைவிகளிருந்தால்) நீங்கள் (உங்கள்) மனைவிகளுக்கு மத்தியில் (முற்றிலும்) நீதியாக நடக்க வேண்டுமென்று (எவ்வளவு) விரும்பியபோதிலும் (அது) உங்களால் சாத்தியப்படாது. ஆனால், (ஒரே மனைவியின் பக்கம்) நீங்கள் முற்றிலும் சாய்ந்து, மற்றவளை (அந்தரத்தில்) தொங்கியவளாக விட்டு விடாதீர்கள். நீங்கள் அல்லாஹ்வுக்குப் பயந்து (உங்களுக்கு மத்தியில்) சமாதானமாக நடந்து கொண்டால் நிச்சயமாக அல்லாஹ் (உங்கள்) குற்றங்களை மன்னித்து அன்பு கொள்பவனாக இருக்கின்றான். (ஸூரா அந்நிஸா 4:129)

"அவர்களுக்கு மத்தியில் சமத்துவம்" என்பது இரவு தங்குதல், செலவிடுதல் மற்றும் ஆடையளித்தல் போன்றவற்றில் நீதியுடன் நடந்து கொள்வதாகும்.

நேசிப்பதில் சமத்துவம் பேணுவது சாத்தியமற்றதாகும். எனவே மார்க்கத்தில் மனைவியரைச் சமமாக நேசிக்க வேண்டுமென

வலியுறுத்தப்படவில்லை. ஏனென்றால், விருப்பமும் வெறுப்பும் மனம் சம்பந்தப்பட்டதாகும். மனத்தைத் திருப்பும் வல்லமை மனிதனுக்குக் கிடையாது.

ஆனால், சிலர் ஒரு மனைவியிடம் அதிக நாட்கள் தங்குகின்றனர்; அவளுக்கு அதிகமாகச் செலவிடுகின்றனர். மற்ற மனைவியைப் புறக்கணிக்கின்றனர். இது மார்க்கத்தில் விலக்கப்பட்ட செயலாகும். இச்செயலைப் புரிபவன், மறுமை நாளில் எத்தகைய இழிநிலையைச் சந்திப்பான் என்பதைப் பின்வரும் நபிமொழி விவரிக்கிறது.

وعن أبي هريرة أن رسول الله صلى الله عليه وسلم من كانت عنده

امرأتان فلم يعدل بينهما جاء يوم القيامة وشقه مائل رواه الترمذي

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: ஒருவனுக்கு இரண்டு மனைவிகள் இருந்து அவன் அந்த இருவரில் ஒருவர் பக்கம் சாய்வானேயானால் அவன் மறுமை நாளில் தனது தோள்புஜம் சரிந்த நிலையில் (இழிவுபடுத்தப்பட்டு) வருவான்.

(ஸுனன் அபூதாவூது)

## 28. தீய நடத்தையைக் கண்டிக்காதது குற்றம்

عن ابن عمر أن رسول الله صلى الله عليه وسلم قال ثلاثة حرم الله تبارك وتعالى

عليهم الجنة مدمن الخمر والعاق والديوث الذي يقر في أهله الخبث

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக இப்னு உமர் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: "மூன்று நபர்கள் (இருக்கின்றார்கள்), அல்லாஹ் அவர்களுக்குச் சுவர்க்கத்தைத் தடை செய்துவிட்டான். நிரந்தரமாக மது அருந்துபவன், பெற்றோருக்கு நோவினை செய்பவன், குடும்பத்தாரின் அசிங்கங்களை, தீய நடத்தைகளை அங்கீகரிப்பவன்." (முஸ்னது அஹ்மது)

தீய நடத்தையை அங்கீகரிப்பதின் பொருள்: உதாரணமாக, குடும்பத்தில் மனைவி, மகள் போன்றோர் காதல், நட்பு, தேநீர் விருந்து (பார்ட்டி) என்ற பெயரில் அன்னிய ஆண்களுடன் நேரடியாகவோ, தொலைபேசியின் வழியாகவோ உரையாடுவதையும் தனித்திருப்பதையும் தடுக்காமல் விட்டுவிடுவதைக் குறிக்கும்.

அவ்வாறே வருவோர் போவோரெல்லாம் பார்த்து மகிழும் வண்ணம் பர்தா எதுவுமின்றி (அலங்கரித்தோ அலங்கரிக்காமலோ) செல்வது, ஒழுக்கக் கேட்டை உருவாக்கும் வீடியோ, சினிமா மற்றும் ஆபாசத்தைத் தூண்டும்

பத்திரிகைகள் போன்றவற்றை வீட்டினுள் அனுமதிப்பது ஆகிய செயல்களும் தீய நடத்தைகளை அங்கீகரிப்பதாகும். இவற்றைத் தனது குடும்ப உறுப்பினரிடையே காணும் குடும்பத் தலைவன், அதைத் தடுக்காமலிருந்தால் இந்த நபிமொழியில் கூறப்பட்ட தண்டனைக்கு அவன் ஆளாகுவான்.

## 29. பெண்கள் குட்டைப் பாவாடை, மெல்லிய, இறுக்கமான ஆடைகளை அணிவது தவறு

இன்றைய இஸ்லாமிய எதிரிகள் தங்களுடைய அநாகரிகக் கலாசார ஆடைகளை நம்மிடையே புகுத்தி விட்டார்கள். அவர்களால் திணிக்கப்பட்ட இந்த ஆடைகள், பெண்ணின் மறைக்க வேண்டிய பகுதிகளை மறைக்காத வகையில் குட்டையாக உள்ளன; அல்லது உடல் பகுதிகள் தெரிகிற வகையில் மிக மெல்லியதாகவோ, உடம்போடு உடம்பாக ஒட்டிக் கொண்டோ இருக்கின்றன.

இந்த அன்னிய கலாசார உடைகளை அணிவது தடுக்கப்பட்டதாகும். பெண்கள் தங்களுக்குள்ளோ (தந்தை, சகோதரன் போன்ற) மஹ்ரமான ஆண்களுக்கு மத்தியிலோ கூட அவற்றை அணியக் கூடாது. இந்தத் தீமைகளைப் பற்றி நபி (ஸல்) அவர்கள் எச்சரித்துள்ளார்கள்.

عن أبي هريرة قال قال رسول الله صلى الله عليه وسلم صنفان من أهل

النار لم أرهما قوم معهم سياط كأذناب البقر يضربون بها الناس ونساء

كاسيات عاريات مميلات مائلات رؤوسهن كأسنمة البخت المائلة لا

يدخلن الجنة ولا يجدن ريحها وإن ريحها ليوجد من مسيرة كذا وكذا

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நரகவாசிகளில் இரு கூட்டத்தார் இருக்கிறார்கள். அவர்களை நான் (இப்போது) பார்க்கவில்லை. அவர்களில் ஒரு கூட்டம் தங்களிடம் மாடுகளின் வாலைப் போன்ற சாட்டைகளை வைத்திருப்பார்கள். அதனால் மக்களை அடித்துத் துன்புறுத்துவார்கள். மற்றொரு கூட்டம் பெண்களாவர். அவர்கள் ஆடையணிந்திருப்பார்கள். ஆனால் அது அவர்களை மறைக்காதபடி நிர்வாணமாகக் காட்சியளிப்பார்கள். பிறரைத் தம் பக்கம் ஈர்ப்பார்கள். தாமும் பிறர் பக்கம் வீழ்வார்கள். இவர்களின் தலை, உயரமான கழுத்துடன் அங்குமிங்கும் சாயும் ஆண் ஒட்டகங்களின் திமில்களைப் போல இருக்கும். இவர்கள் சுவனத்தில் நுழையமாட்டார்கள்; அதன் வாடையைக் கூட நுகரமாட்டார்கள்; சுவர்க்கத்தின் வாடையை இன்னின்ன தூரத்திலிருந்தும் அடைந்து கொள்ளலாம்.(ஆனால், இவர்களோ அச்சுவர்க்கத்தை விட்டு வெகுதூரம் விலக்கி

வைக்கப்பட்டிருப்பார்கள்.) (ஸஹீஹ் முஸ்லிம்)

சில பெண்கள் நீளமான கீழாடையை அணிகிறார்கள். ஆனால் அது கீழிருந்து கிழிக்கப்பட்டதாக இருக்கிறது. அவர்கள் உட்காரும் போதும் நடந்து செல்லும்போதும் அவர்களது அங்கங்கள் தெரிகின்றன. இவ்வாறான ஆடைகளை அணிவதும் குற்றமே!

மதுக் கிண்ணங்கள், சினிமா நடிகர், நடிகைகளின் உருவங்கள், மிருகங்கள், பறவைகளின் உருவங்கள், விளையாட்டு மற்றும் கேளிக்கை சங்கங்களின் (Logo) அடையாளச் சின்னங்கள் வரையப்பட்ட ஆடைகள், தவறான வாசகங்கள் (Worship Satan, I Love satan) எழுதப்பட்ட ஆடைகள் சமுதாய மக்களால் பரவலாக அணியப்படுகின்றன. இவை அனைத்தும் அந்நியர்களால் புகுத்தப்பட்ட சீர்கேடுகளாகும். முற்றிலுமாக சமுதாயத்தை விட்டு இவை அகற்றப்பட வேண்டும்.

## 30. பெண்கள் வாசனை பூசிக் கொண்டு ஆண்களுக்கு மத்தியில் செல்வது குற்றம்

நபி (ஸல்) அவர்கள் வன்மையாகக் கண்டித்திருந்தும் இது நமது பெண்களிடையே மிகுதமாக பரவி நிற்கும் தீமையாகும்.

قال النبي صلى الله عليه وسلم أيما امرأة استعطرت فمرت على قوم

ليجدوا ريحها فهي زانية

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: எந்தப் பெண் நறுமணம் பூசிய நிலையில் அதை மக்கள் நுகர வேண்டுமென்பதற்காக அவர்களுக்கு மத்தியில் நடந்து செல்கிறாளோ அவள் விபசாரியாவாள். (முஸ்னது அஹ்மது)

சில பெண்கள் இது விஷயத்தில் அலட்சியமாக இருக்கின்றார்கள். தங்களது வாகன ஓட்டுநர்கள் (டிரைவர்), கடைக்காரர்கள், காவலாளிகள் போன்றவர்களிடம் நறுமணம் பூசிய நிலையில் நெருங்கிப் பழகுகிறார்கள். மார்க்கம் இதை வன்மையாகக் கண்டிக்கிறது.

قال رسول الله أيما امرأة تطيبت ثم خرجت إلى المسجد لم تقبل لها صلاة

حتى تغتسل اغتسالها من الجنابة

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஒரு பெண் நறுமணம் பூசி மஸ்ஜிதுக்குச் செல்வாளேயானால், அவள் பெருந்தொடக்குக்காக குளிப்பது போன்று குளிக்கும்வரை அவளது தொழுகை ஒப்புக் கொள்ளப்படாது. (முஸ்னது அஹ்மது)

நமது குடும்பப் பெண்கள் திருமண விழாக்களில் நறுமணம் கமழ

ஆண்களுக்கு மத்தியில் வலம் வருகின்றார்கள். இந்தக் குற்றத்தின் கடுமையை அவர்கள் அறியவில்லை.

பெண்களுக்கான நறுமணப் பொருட்கள் நிறமுடையதாகவும் இலேசான மணமுடையதாகவும் இருக்க வேண்டுமென்பது மார்க்கச் சட்டமாகும்.

## 31. தகுந்த துணையின்றி பெண் பயணம் மேற்கொள்வது குற்றம்

قال رسول الله صلى الله عليه وسلم لا تسافر المرأة إلا ومع ذي محرم

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: “பெண் (தனக்குரிய) மஹ்ரம் உடனே தவிர பயணம் செய்ய வேண்டாம்.” (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

மஹ்ரம் (– மணமுடிக்க நிரந்தரமாக விலக்கப்பட்டவர், உம்: சகோதரர், தந்தை, தாயின் சகோதரர்) முஸ்லிமாகவும் ஆணாகவும் வயது வந்தவராகவும் புத்தி சுயாதீனம் உள்ளவராகவும் இருக்க வேண்டும்.

மஹ்ரமின் துணையின்றி பயணம் செய்பவள் தீய உள்ளம் கொண்டவர்களின் இழி செயலுக்கு இலக்காகி வழி தவறிவிடலாம்; அல்லது அப்பெண்ணின் கவுரவத்துக்குப் பங்கம் ஏற்படலாம்.

தமது குடும்பப் பெண்கள் பயணம் செய்யும்போது அனுப்பி வைக்கவும் வரவேற்கவும் மட்டும் மஹ்ரமான ஆண்கள் வருகிறார்கள். பயணத்தில் உடனிருப்பதில்லை. பேருந்து, விமானம் மற்றும் ரயில் பயணத்தின்போது அவளது பக்கத்து இருக்கையில் அன்னிய ஆண்கள் அமர்வார்கள்; அல்லது சில நேரங்களில் வாகனம் புறப்படுவது தாமதமாகி தங்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படும்; அல்லது விமானம் பறந்து கொண்டிருக்கும்போது ஏதேனும் கோளாறுகளின் காரணமாக சில நாட்களோ சில மணி நேரங்களோ மஹ்ரம் இன்றி தங்க வேண்டிய சூழ்நிலை அப்பெண்ணுக்கு உருவாகலாம். இது போன்ற சமயங்களில் நடக்கும் பல தவறான நிகழ்ச்சிகளை நாம் கேள்விப்படுகிறோம்.

عن أبي سعيد قال قال رسول الله صلى الله عليه وسلم لا يحل لامرأة
تؤمن بالله واليوم الآخر أن تسافر سفرا يكون ثلاثة أيام فصاعدا إلا
ومعها أبوها أوأخوها أوزوجها أو ابنها أوذو محرم منها رواه البخاري

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வையும் மறுமை நாளையும் நம்பிக்கை கொண்ட பெண் மூன்று நாட்கள் அல்லது அதற்கு மேற்பட்டு பயணம் செல்வதாக இருந்தால் அவளுடன் அவளது தந்தை,

அல்லது சகோதரன், அல்லது கணவன், அல்லது மகன் அல்லது மஹ்ரம் உடன் தவிர பயணம் செய்ய வேண்டாம். (ஸஹீஹுல் புகாரி)

## 32. ஒட்டுமுடி கட்டுவது குற்றம்

ஆணாயினும் பெண்ணாயினும் தமது முடியுடன் ஒட்டுமுடி கட்டுவது ஹராமாகும். அது மனித முடி அல்லது மிருக முடியாயினும் சரியே!

عن أسماء أن امرأة سألت النبي صلى الله عليه وسلم فقالت يا رسول الله

إن ابنتي أصابتها الحصبة فتمرق شعرها وإني زوجتها أفأصل فيه فقال

لعن الله الواصلة رواه البخاري ومسلم

அஸ்மா பின்த் அபூபக்ர் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: ஒரு பெண் நபி (ஸல்) அவர்களிடம், "அல்லாஹ்வின் தூதரே! எனது மகளுக்கு அவளது தலையில் பொடுகின் காரணமாக முடி கொட்டி விட்டது. நான் அவளுக்குத் திருமணம் செய்து வைக்க இருக்கிறேன். அவளுக்கு நான் ஒட்டுமுடி அணிவிக்கலாமா?" என்று கேட்டாள். அதற்கு நபி (ஸல்) அவர்கள் "ஒட்டுமுடி கட்டுபவளை அல்லாஹ் சபிக்கிறான்" என்று கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

عن جابر قال زجر النبي صلى الله عليه وسلم أن تصل المرأة برأسها شيئا

ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: " பெண்கள் தங்களது தலையில் ஒட்டு முடி அணிவதை நபி (ஸல்) அவர்கள் கண்டித்தார்கள்." (ஸஹீஹ் முஸ்லிம்)

## 33. கரண்டைக் காலுக்குக் கீழ் ஆடை அணிவது குற்றம்

இதை மனிதர்கள் இலேசாகக் கருதுகிறார்கள். ஆனால் அல்லாஹ்விடமோ இது மகத்தான குற்றமாக இருக்கின்றது.

சிலர் கரண்டைக் காலுக்குக் கீழ் ஆடையை அணிகிறார்கள்; சிலரின் ஆடைகள் தரையில் இழுபடுகின்றன; சிலர் தோளில் தொங்கும் துணி தரையில் இழுபட்டுச் செல்கிறது.

وعن أبي ذر عن النبي صلى الله عليه وسلم قال ثلاثة لا يكلمهم الله يوم

القيامة ولا ينظر إليهم ولا يزكيهم ولهم عذاب أليم قال أبوذر خابوا

وخسروا من هم يا رسول الله قال المسبل والمنان والمنفق سلعته بالحلف

الكاذب رواه مسلم

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூதர் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: மூன்று நபர்கள் (இருக்கின்றார்கள்), மறுமை நாளில்

அல்லாஹ் அவர்களுடன் பேசமாட்டான்; அவர்களைப் பார்க்கவுமாட்டான்; அவர்களைப் பரிசுத்தப்படுத்தவுமாட்டான். அவர்களுக்கு நோவினை தரும் வேதனையுண்டு. (அவர்கள்) ஆடையைத் (தனது கரண்டைக் காலுக்குக் கீழ்) தொங்கவிடுபவன், உபகாரத்தைச் சொல்லிக் காட்டுபவன், பொய் சத்தியம் செய்து தனது பொருளை விற்பவன். (ஸஹீஹ் முஸ்லிம்)

எவரேனும் "எனது ஆடை தொங்குவது பெருமையினால் அல்ல" என்று கூறி தம்மைத் தாமே பரிசுத்தவானாகக் கூறிக் கொண்டால் அது ஏற்கத் தகுந்ததல்ல. ஏனெனில் பெருமையுடன் தொங்க விடுபவருக்கு மட்டுமே தண்டனை என மார்க்கத்தில் வரையறுக்கப்படவில்லை என்பதை பின்வரும் நபிமொழி உறுதிப்படுத்துகிறது.

قال رسول الله صلى الله عليه وسلم ما تحت الكعبين من الإزار ففي النار

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "கரண்டைக் காலுக்குக் கீழே உள்ள ஆடை நரகத்தில்." (முஸ்னது அஹ்மது)

தற்பெருமையுடன் ஆடையைத் தொங்க விடுபவனின் முடிவு மிகக் கொடூரமாக அமையும்!

ஏனென்றால் இவன் இருவகையான குற்றங்களைச் செய்தவனாவான். ஒன்று பெருமை; மற்றொன்று கரண்டைக் காலுக்குக் கீழ் ஆடையைத் தொங்கவிட்டது. ஆடையைக் கரண்டை காலுக்குக் கீழ் எந்த வகையில் தொங்கவிட்டாலும் அது தடுக்கப்பட்டதே! கீழாடை, சட்டை, தலைப்பாகை என எதுவாயினும் கரண்டைக்குக் கீழ் தொங்கவிடுவது குற்றமாகும்.

قال رسول الله صلى الله عليه وسلم من جر ثوبه خيلاء لم ينظر الله إليه يوم القيامة

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக இப்னு உமர் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: " எவன் தனது ஆடையை பெருமை கொண்டவனாக (பூமியில்) இழுத்துச் செல்வானோ அவனை அல்லாஹ் மறுமை நாளில் பார்க்க மாட்டான்." (ஸஹீஹுல் புகாரி)

பெண்களைப் பொருத்தவரை கால் தெரியாத அளவிற்கு முழுமையாக ஆடையை அதிகப்படுத்திக் கொள்ள வேண்டும். அதே நேரத்தில் இன்று மணமகளுக்கு அணிவிக்கப்படுகின்ற ஆடையைப் போன்று பல மீட்டர்கள் தொங்கவிடுவதும் தடுக்கப்பட்டதாகும்.

## 34. தலைமுடிக்குக் கருப்புச் சாயமிடுவது குற்றம்

قال النبي صلى الله عليه وسلم يكون قوم في آخر الزمان يخضبون بهذا السواد كحواصل الحمام لا يجدون رائحة الجنة رواه أبوداود

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "இறுதிக் காலத்தில் ஒரு சமுதாயத்தினர் புறாக்களின் கழிவுகளைப் போன்று கருமை நிறத்தால் சாயமிட்டுக் கொள்வார்கள். அவர்கள் சுவர்க்கத்தின் வாடையைக் கூட நுகரமாட்டார்கள்". (ஸுனன் அபூதாவூது)

தலை முடி நரைத்தவர்கள் கருமை நிற சாயமிட்டுக் கொள்வது சாதாரணமாகிவிட்டது. இது அல்லாஹ் படைத்த இயற்கை அமைப்புக்கு முரண்பட்டு, உண்மைத் தோற்றத்தை மறைப்பதாகும்.

தற்காலத்தில் அழகு நிலையங்களில் **(Beauty Parlour)** ஒட்டுமுடிக்கு மிகுந்த முக்கியத்துவம் கொடுக்கப்படுகின்றது. அதை அணிவிப்பதற்காகத் தேர்ச்சி பெற்ற பெண்கள் இருக்கின்றனர். சமூக ஒழுக்கங்களைச் சீர்குலைக்கும் சினிமா மற்றும் நாடக நடிகர்கள் தங்களது கதாபாத்திரங்களுக்காக செயற்கை (டோபா) முடிகளை அணிகின்றனர். அவர்களது தொழிலும், செயலும் கெட்டதே! மேலும், இது ஒருவர் தமது உண்மை நிலையை மறைத்து மற்றவர்களை ஏமாற்றும் அற்பச் செயலாகும். இது போன்ற செயல்கள் ஒழுங்கீனங்களாகும்.

நபி (ஸல்) அவர்கள் மருதாணி போன்ற பொருட்களால் மஞ்சள் அல்லது செம்மை நிறமாக தங்களது தலைமுடியின் நிறத்தை மாற்றிக் கொண்டார்கள்.

மக்கா வெற்றியின்போது அபூபக்ர் ஸித்தீக் (ரழி) அவர்களின் தந்தை அபூ குஹாஃபா (ரழி) அவர்களை நபி (ஸல்) அவர்களிடம் அழைத்து வரப்பட்டபோது அவரது தலைமுடி நரையால் வெண்மையாகப் பிரகாசித்தது.

قال رسول الله صلى الله عليه وسلم غيروا هذا بشيء واجتنبوا السواد

நபி (ஸல்) அவர்கள் "இந்த வெண்மையை ஏதேனும் ஒன்றால் மாற்றி விடுங்கள்; கருப்பு நிறத்தைத் தவிர்த்துக் கொள்ளுங்கள்" என்று கூறினார்கள். (ஸஹீஹ் முஸ்லிம்)

## 35. தங்கம் அணிவது குற்றம்

قال رسول الله صلى الله عليه وسلم إن الله عزوجل أحل لإناث أمتي

الحرير والذهب وحرمه على ذكورها

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூமூஸா அல்அஷ்அரீ (ரழி) அவர்கள் கூறினார்கள்: பட்டும் தங்கமும் எனது உம்மத்திலுள்ள பெண்களுக்கு அனுமதிக்கப்பட்டது; ஆண்களுக்கு விலக்கப்பட்டதாகும். (முஸ்னது அஹ்மது)

இன்று கடை வீதிகளில் ஆண்களுக்காகவே தங்கத்தால் செய்யப்பட்ட அல்லது தங்க முலாம் பூசப்பட்ட கைக் கடிகாரங்கள், மூக்குக் கண்ணாடி

பிரேம்கள், டை பின்கள், பேனாக்கள், செயின்கள், பொத்தான்கள் விற்கப்படுகின்றன. இவற்றை அணிவது ஆண்களுக்கு ஆகுமானதல்ல.

மிகக் கடுமையாகக் கண்டிக்க வேண்டிய விஷயம் என்னவெனில் சில விழாக்களில் ஆண்களுக்குத் தங்கத்தினாலான கைக்கடிகாரங்கள் பரிசாக அளிக்கப்படுகின்றன.

عن عبد الله بن عباس أن رسول الله صلى الله عليه وسلم رأى خاتما من ذهب في يد رجل فنــزعه فطرحه فقال يعمد أحدكم إلى جمرة من نار فيجعلها في يده ؟ فقيل للرجل بعدما ذهب رسول الله خذ خاتمك انتفع به قال لا والله لا آخذه أبدا وقد طرحه رسول الله صلى الله عليه وسلم

இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள் கூறினார்கள்: "நபி (ஸல்) அவர்கள் ஆடவர் ஒருவரின் கரத்தில் தங்க மோதிரத்தைக் கண்டார்கள். அதை அவரிடமிருந்து கழற்றி வீசி எறிந்துவிட்டு "உங்களில் எவரேனும் நரகின் நெருப்புக் கங்குகளைத் தமது கரத்தில் ஆக்கிக் கொள்ள விரும்புவாரா?" என்று கூறினார்கள். நபி (ஸல்) அவர்கள் சென்ற பிறகு அம்மனிதரிடம் "உன் மோதிரத்தை எடுத்து (விற்று) பயனடைந்துகொள்" என்று கூறப்பட்டபோது அவர் "அல்லாஹ்வின் மீது ஆணையாக! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வீசி எறிந்ததை ஒருபோதும் நான் எடுக்க மாட்டேன்" என்று கூறிவிட்டார். (ஸஹீஹ் முஸ்லிம்)

## 36. ஆண், பெண்ணுக்கும் பெண் ஆணுக்கும் ஒப்பாவது குற்றம்

அல்லாஹ் தனது அடியார்களுக்கென சில இயற்கைகளை நிர்ணயித்துள்ளான். ஆண் தனது ஆண்மையையும் பெண் தனது பெண்மையையும் பாதுகாக்க வேண்டும். இதன் மூலமே அல்லாஹ் அமைத்த இயற்கையைப் பாதுகாத்து மனித வாழ்வைச் செம்மையாக்க முடியும்.

நடை, உடை, பாவனையில் ஆண் பெண்ணுக்கும் பெண் ஆணுக்கும் ஒப்பாவது இயற்கைக்கு முரணானதும் சமூகச் சீரழிவின் திறவுகோலுமாகும். இந்தச் செயலைச் செய்பவர்களை நபி (ஸல்) அவர்கள் சபித்துள்ளார்கள் என்பதிலிருந்தே இது பெரும்பாவம், ஹராமானது என்று விளங்கிக் கொள்ளலாம்

عن ابن عباس قال لعن رسول الله صلى الله عليه وسلم المتشبهين من الرجال بالنساء والمتشبهات من النساء بالرجال رواه البخاري وأبو داود

இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள் கூறினார்கள்: "ஆண்களில் பெண்களைப் போன்ற நடத்தை உடையவர்களையும் பெண்களில் ஆண்களைப் போன்ற நடத்தை உடையவர்களையும் நபி (ஸல்) அவர்கள் சபித்தார்கள்."

(ஸஹீஹுல் புகாரி)

لعن رسول الله صلى الله عليه وسلم المخنثين من الرجال والمترجلات من النساء

இப்னு அப்பாஸ் (ரழி) மேலும் கூறினார்கள்: "பெண்களைப் போன்று பாவனை செய்யும் ஆண்களையும் ஆண்களைப் போன்று நடை, உடை, பாவனைகளை வெளிப்படுத்தும் பெண்களையும் நபி (ஸல்) அவர்கள் சபித்தார்கள்."

(ஸஹீஹுல் புகாரி)

நடை, உடை, பேச்சு இவற்றில் ஆணும் பெண்ணும் தங்களது தனித் தன்மையைப் பாதுகாக்க வேண்டும். அவ்வாறே ஒரு பாலாரின் ஆடையை மற்றொரு பாலார் அணியக் கூடாது.

ஆண்கள் கை, கழுத்தில் வளையம் அணிவது, தோடு, தொங்கட்டான், கால் சலங்கை போன்றவற்றை அணிவது தடுக்கப்பட்டதாகும். இவற்றை இன்று சில வீணர்கள் அணிந்து கொள்கிறார்கள்.

பெண்கள் அணியும் ஆடை ஆண்கள் அணியும் ஆடையிலிருந்து வேறுபட்டிருக்க வேண்டும்.

لعن رسول الله صلى الله عليه وسلم الرجل يلبس لبسة المرأة
والمرأة تلبس لبسة الرجل

அபூ ஹுரைரா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: "பெண்களைப் போன்று ஆடையணியும் ஆண்களையும் ஆண்களைப் போன்று ஆடையணியும் பெண்களையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சபித்தார்கள்."

(ஸுனன் அபூதாவூது)

## 37. அனுமதியின்றி வீட்டினுள் நுழைவது, பார்ப்பது குற்றம்

يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوا۟ لَا تَدْخُلُوا۟ بُيُوتًا غَيْرَ بُيُوتِكُمْ حَتَّىٰ تَسْتَأْنِسُوا۟ وَتُسَلِّمُوا۟
عَلَىٰٓ أَهْلِهَا ۚ ذَٰلِكُمْ خَيْرٌ لَّكُمْ لَعَلَّكُمْ تَذَكَّرُونَ

நம்பிக்கையாளர்களே! உங்களுடையதல்லாத வீடுகளில் நீங்கள் (நுழையக் கருதினால்) அதில் இருப்பவர்களுக்கு ஸலாம் கூறி (அவர்களுடைய) அனுமதியைப் பெறாதவரை நுழையாதீர்கள். இவ்வாறு நடந்து கொள்வது உங்களுக்கே மிக்க நன்று. (இதனை மறந்து விடாது)

நீங்கள் கவனத்தில் வைப்பீர்களாக! (ஸூரா அந்நூர் 24:27)

பார்க்கத் தகாததைப் பார்த்திட நேரிடும் என்பதால்தான் அனுமதி கோருவது விதிக்கப்பட்டது என்பதை நபி (ஸல்) அவர்கள் தெளிவுபடுத்திக் கூறினார்கள்.

قال رسول الله صلى الله عليه وسلم إنما جعل الإستئذان من أجل البصر

"அனுமதி கோருவது அவசியமாக்கப்பட்டதெல்லாம் பார்வையின் காரணமாகத்தான்." (ஸஹீஹுல் புகாரி)

தற்காலத்தில் வீடுகளும் கட்டடங்களும் மிக நெருக்கமாக அமைக்கப்படுகின்றன. கதவைத் திறந்தால் எதிர் வீட்டில் நடக்கும் அனைத்தையும் காண முடிகிறது. இச்சந்தர்ப்பங்களில் பெரும்பாலோர் தங்களது பார்வைகளைத் தவிர்ப்பதில்லை. சிலர் மாடியிலிருந்தும் உயர்ந்த ஜன்னல்களிலிருந்தும் தங்களுக்குக் கீழே குடியிருப்பவர்களை உற்று நோக்கிக் கொண்டிருக்கிறார்கள். இது அண்டை வீட்டாரின் கவுரவத்தைப் பாதிக்கக்கூடிய செயலாகும். மேலும் ஹராமான செயல்களுக்கும் வழிவகுக்கக் கூடியதாகும். இதை அவர்கள் அறிந்து கொள்வதில்லை.

இதனால் ஏராளமான குழப்பங்களும், பிரச்சினைகளும் ஏற்படுகின்றன. திருட்டுத்தனமாக உற்றுப் பார்ப்பவனின் கண்களைத் தோண்டிவிடவும் மார்க்கம் அனுமதித்திருப்பதே இது ஒரு மிகக் கெட்ட காரியம் என்பதற்கு போதுமான சான்றாகும்.

قال رسول الله صلى الله عليه وسلم من اطلع في بيت قوم بغير إذنهم فقد
حل لهم أن يفقؤوا عينه

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஒரு சமுதாயத்தவரின் வீட்டினுள் அவர்களது அனுமதியின்றி ஒருவன் உற்றுப் பார்த்தால் அவனது கண்ணைத் தோண்டி விடுவது அந்தச் சமுதாயத்தவருக்கு அனுமதிக்கப் பட்டதாகும். (ஸஹீஹ் முஸ்லிம்)

وفي رواية للنسائي أن النبي صلى الله عليه وسلم قال من اطلع في بيت
قوم بغير إذنهم ففقؤوا عينه فلا دية له ولا قصاص

மற்றோர் அறிவிப்பில், "யார் ஒருவர் பிறருடைய வீட்டில் அவரது அனுமதியின்றி பார்க்க அவர் பார்த்தவரின் கண்ணைப் பிடுங்கிவிட்டால் அதற்காக நஷ்ட ஈடுமில்லை; பழிவாங்குதலும் இல்லை" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (ஸுனன் நஸாயி)

# 38. திருடுவது பெரும் பாவம்

وَٱلسَّارِقُ وَٱلسَّارِقَةُ فَٱقْطَعُوٓا۟ أَيْدِيَهُمَا جَزَآءًۢ بِمَا كَسَبَا نَكَٰلًا مِّنَ ٱللَّهِ وَٱللَّهُ عَزِيزٌ حَكِيمٌ

ஆணோ பெண்ணோ எவர் திருடினாலும் (இத்)தீய செயலுக்குத் தண்டனையாக அவர்களின் கைகளைத் துண்டித்து விடுங்கள். (இது) அல்லாஹ்வினால் ஏற்படுத்தப்பட்ட தண்டனையாகும். அல்லாஹ் மிகைத்தோனும் ஞானமுடையோனுமாயிருக்கிறான்.

(ஸூரா அல்மாயிதா 5:39)

ஹஜ், உம்ராவுக்கு வருபவர்களிடம் திருடுவது மாபெரும் குற்றமாகும். இத்திருடர்கள் புனித பூமியில் அல்லாஹ்வின் இல்லத்திற்கு அருகில் அல்லாஹ்வின் விருந்தினர்களிடம் தங்களது கைவரிசையைக் காட்டுகிறார்கள்.

قال رسول الله صلى الله عليه وسلم لقد جيء بالنار وذلك حين رأيتموني تأخرت مخافة أن يصيبني من لفحها وحتى رأيت فيها صاحب المحجن يجر قصبه في النار وكان يسرق الحاج بمحجنه فإن فطن له قال إنما تعلق بمحجني وإن غفل عنه ذهب به رواه مسلم

நபி (ஸல்) அவர்கள் சூரிய கிரகணத் தொழுகைக்குப் பின் கூறினார்கள்: "இப்போது நரகத்தை எனக்கு முன் கொண்டு வரப்பட்டது. அதன் ஜுவாலை என்னைத் தீண்டிவிடக் கூடாது என்பதற்காக சற்று பின் நகர்ந்து கொண்டேன். அந்த நரகத்தில் ஸாஹிபுல் மிஹ்ஜன் (தடியால் திருடியவன்) தனது குடலை இழுத்துச் செல்வதைப் பார்த்தேன். அவன் ஹாஜிகளிடம் தனது நுனிவளைந்த தடியைக் கொண்டு திருடுவான். எவரேனும் அதைப் பார்த்துவிட்டால் எனது தடி மாட்டிக் கொண்டது என்று கூறி(விட்டு)விடுவான். எவரும் கவனிக்கவில்லையென்றால் அதை எடுத்துச் சென்று விடுவான்." (ஸஹீஹ் முஸ்லிம்)

பொதுச் சொத்துகளை அபகரிப்பது பெரும்பாவமாகும். இவ்வாறு அபகரிப்பவர்கள், 'பலரும் செய்வதைத்தானே நாங்களும் செய்கிறோம்' என்று கூறி தங்களது செயலை நியாயப்படுத்துகின்றார்கள். மஸ்ஜிது, பைத்துல் மால் போன்ற பொதுச் சொத்துகள் அனைத்து முஸ்லிம்களுக்கும் உரிமையானவை என்பதால் அவற்றைத் திருடுபவன் உலகின் அனைத்து முஸ்லிம்களையும் மோசடி செய்தவனாவான். எனவே இறையச்சமற்ற சிலரது மோசடித்தனத்தை மார்க்க ஆதாரமாகக் கொள்ள முடியாது.

சிலர் முஸ்லிமல்லாதவர்களின் பொருளைத் திருடிவிட்டு "இவர்கள் காஃபிர்கள்தானே'' என்று அலட்சியமாகக் கூறுகிறார்கள். முஸ்லிமல்லாதவர்களின் உடைமையையோ, அவர்களின் நிறுவனங்களிலோ திருடுவதற்கு மார்க்கத்தில் எந்த அனுமதியும் கிடையாது.

சிலர் விருந்தாளியாகச் சென்று திருடுகின்றார்கள். மற்றும் சிலர் விருந்தாளியிடம் திருடுகிறார்கள். சிலர் அங்காடிகளுக்குச் செல்லும்போது பொருட்களைத் திருடி தங்களது ஆடைகளுக்குள் மறைத்துக் கொள்கிறார்கள். சிலர் அற்பப் பொருள்தானே என எண்ணித் திருடுகிறார்கள். இவை அனைத்தும் குற்றங்களாகும்.

عن أبي هريرة عن النبي صلى الله عليه وسلم قال لعن الله السارق يسرق البيضة فتقطع يده ويسرق الحبل فتقطع يده متفق عليه

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "அல்லாஹ் திருடனைச் சபிக்கிறான். அவன் (அற்பமான) முட்டையைத் திருடுகிறான். அதனால் அவனது கை வெட்டப்படுகிறது. (அற்பமான) கயிற்றைத் திருடுகிறான். அதனால் அவனது கை வெட்டப்படுகிறது." (ஸஹீஹுல் புகாரி)

ஒரு பொருளைத் திருடியவன் அல்லாஹ்வின் மன்னிப்பைப் பெற வேண்டுமெனில் அப்பொருளை உரிமையாளரிடம் திரும்பக் கொடுத்து பாவமன்னிப்பும் கேட்க வேண்டும். பொருளின் உரிமையாளரிடமோ அவரது வாரிசுகளிடமோ மிகுந்த சிரமமெடுத்தும் ஒப்படைக்க இயலவில்லையெனில் அதைத் தர்மம் செய்து அதன் நன்மை அதற்குரியவரைச் சேர வேண்டுமென அல்லாஹ்விடம் ஆதரவு வைக்க வேண்டும்.

## 39. தேவையின்றி கையேந்தித் திரிவது குற்றம்

قال رسول الله صلى الله عليه وسلم من سأل وعنده ما يغنيه فإنما يستكثر من جمر جهنم قالوا وما الغنى الذي لا ينبغي معه المسألة ؟ قال قدر ما يغديه ويعشيه وقال في موضع آخر أن يكون له شبع يوم أوليلة

ஸஹ்ல் இப்னு ஹன்ளலிய்யா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: "போதுமான செல்வம் இருந்தும் ஒருவன் கையேந்தினால் அவன் நரகத்தின் நெருப்புக் கங்குகளையே அதிகரித்துக் கொள்கிறான்" என நபி (ஸல்) அவர்கள் கூறியபோது, தோழர்கள் "பிறரிடம் கையேந்திட

அனுமதிக்கப்படாத செல்வ நிலை எது" என வினவினார்கள். அதற்கு, நபி (ஸல்) அவர்கள், "அன்றைய நாளின் காலை மற்றும் இரவு உணவுக்குரியதை வைத்திருப்பது" என்று கூறினார்கள்.

(ஸுனன் அபூதாவூது)

قال رسول الله صلى الله عليه وسلم من سأل وله ما يغنيه جاءت

مسألته يوم القيامة خدوشا أو خموشا أو كدوحا في وجهه

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக இப்னு மஸ்வூது (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: "போதுமான வசதியிருந்தும் பிறரிடம் கையேந்துபவன் மறுமை நாளில் முகத்தில் சதையற்றவனாக வருவான்." (முஸ்னது அஹ்மது)

மோசடிக்காரர்களில் சிலர் அல்லாஹ்வின் இல்லங்களான மஸ்ஜிதுகளின் வாசல்களில் பொய்யான ஆவணங்களுடன், கட்டுக் கதைகள் கூறி கையேந்தி நிற்கிறார்கள். தங்களது குடும்ப உறுப்பினர்களைப் பல மஸ்ஜிதுகளுக்கும் பிரித்து அனுப்பிவிட்டு பிறகு சேர்ந்து கொள்கிறார்கள். இவ்வாறே ஒவ்வொரு மஸ்ஜிதையும் முற்றுகையிடுகிறார்கள். அவர்கள் எத்தகைய செல்வச் செழிப்பை உடையவர்கள் என்ற விவரம் அவர்களது மரணத்துக்குப் பிறகுதான் வெளியாகிறது.

மற்றொரு புறத்தில் வறுமையில் வாடும் பலர் தங்களது நிலையைப் பிறருக்கு வெளிக்காட்ட விரும்பாமல் மிகுந்த சிரமத்துடன் வாழ்க்கையைக் கழித்துக் கொண்டிருக்கிறார்கள். எவரிடமும் அவர்கள் கையேந்துவதில்லை என்பதால் அவர்களது உண்மை நிலை எவருக்கும் தெரிவதில்லை. ஆடம்பரத்துக்காக கையேந்துகிற போலிகளால் உண்மையான தேவையுடைய மக்கள் உதவி பெறுவது தடுக்கப்படுகிறது.

## 40. வட்டி உண்பது பெரும்பாவம்

அல்லாஹ் தனது நூல் குர்ஆனில் வட்டி வாங்குபவர்களைத் தவிர வேறு எவருடனும் போர் தொடுப்பதாகக் கூறவில்லை.

يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُواْ ٱتَّقُواْ ٱللَّهَ وَذَرُواْ مَا بَقِيَ مِنَ ٱلرِّبَوٰٓاْ إِن كُنتُم مُّؤْمِنِينَ

فَإِن لَّمْ تَفْعَلُواْ فَأْذَنُواْ بِحَرْبٍ مِّنَ ٱللَّهِ وَرَسُولِهِۦ

நம்பிக்கையாளர்களே! நீங்கள் (உண்மையாகவே) நம்பிக்கை கொண்டவர்களாக இருந்தால் அல்லாஹ்வுக்குப் பயந்து வட்டியில் (இதுவரை வாங்கியது போக) மீதமிருப்பதை (வாங்காமல்) விட்டு விடுங்கள். இவ்வாறு நீங்கள் நடந்து கொள்ளாவிட்டால் அல்லாஹ்வுடனும் அவனுடைய தூதருடனும் போர் புரியத் தயாராகி விடுங்கள்.

(ஸூரா அல்பகறா 2:278, 279)

தற்காலத்தில் வட்டியால் ஏற்படும் அழிவுகளை அதிகமாகக் காண்கிறோம். தங்களது தொழில் மற்றும் நிறுவனங்களுக்காக வட்டி வாங்கியவர்கள் அதை விட்டு மீள்வதற்காக கடுமையாகப் போராடியும் மீள முடியாமல் அனைத்தையும் இழந்து தெருவில் நிற்கிறார்கள். செல்வம் அனைத்தும் ஒரு சாராரிடம் தேங்கி விடுகிறது. ஒரு கூட்டம் வட்டியால் செல்வத்தைப் பெருக்கிக் கொண்டே செல்ல மற்றொரு கூட்டம் மேன்மேலும் வறுமையில் வீழ்ந்து கொண்டிருக்கிறது. அல்லாஹ் எச்சரிக்கும் போரின் வெளிப்பாடுகளில் இதுவும் ஒன்றாகும்.

வட்டியுடன் எந்த விதத்தில் சம்பந்தப்பட்டாலும் அது குற்றச் செயலே!

عن جابر قال لعن رسول الله صلى الله عليه وسلم آكل الربا وموكله
وكاتبه وشاهديه وقال هم سواء متفق عليه

ஜாபிர் (ரழி) அவர்கள் கூறுகிறார்கள்: "வட்டி சாப்பிடுபவன், சாப்பிடக் கொடுப்பவன், அதை எழுதுபவன், அதன் இரு சாட்சிகள் ஆகியோரை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சபித்துள்ளார்கள்." மேலும் கூறினார்கள்: "அவர்கள் அனைவரும் குற்றத்தில் சமமானவர்களே."

(ஸஹீஹ் முஸ்லிம்

இதன் அடிப்படையில் வட்டிக் கணக்கு எழுதுவதும் 'ஹராம்' விலக்கப்பட்டதாகும். வட்டியுடன் எவ்வகையில் தொடர்பு வைப்பதும் குற்றமே! இது எவ்வளவு இழிவான செயல் என்பது பற்றி நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

وعن ابن مسعود عن النبي صلى الله عليه وسلم قال الربا ثلاث وسبعون
بابا أيسرها مثل أن ينكح الرجل أمه وإن أربى الربا عرض الرجل المسلم

"வட்டி 73 வகைகளாகும். அவற்றில் மிகக் குறைந்தது ஒரு மனிதன் தனது தாயைத் திருமணம் செய்வதைப் போன்றதாகும். வட்டியில் மிகக் கடுமையானது ஒரு முஸ்லிமின் கண்ணியத்தைத் தகர்ப்பதாகும்."

(முஸ்தத்ரகுல் ஹாகிம்)

عن عبدالله بن حنظلة عن النبي صلى الله عليه وسلم درهم ربا يأكله
الرجل وهو يعلم أشد عند الله من ستة وثلاثين زنية رواه الإمام أحمد

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அப்துல்லாஹ் பின் ஹன்ளலா (ரழி) அறிவிக்கிறார்கள்: "அறிந்த நிலையில் ஒருவர் ஒரு திர்ஹம் வட்டியைச் சாப்பிடுவது 36 முறை விபசாரம் செய்வதைவிட (பாவத்தால்) மிகக் கடுமையானதாகும்." (முஸ்னது அஹ்மது)

வட்டி தடை செய்யப்பட்டிருப்பதில் ஏழை, செல்வந்தர் என்ற வேறுபாடு எதுவும் இல்லை. எல்லா நிலைகளிலும் அனைவருக்கும் அது ஹராமானதே!

எத்தனையோ தொழிலதிபர்களும் செல்வந்தர்களும் வட்டியின் காரணமாக வறுமைக்கு ஆளாகி விடுவதை அன்றாடம் காண்கிறோம். வட்டி, தோற்றத்தில் வளர்ச்சியடைவது போலத் தோன்றினாலும் அதில் அல்லாஹ்வின் பரக்கத் (அருள்வளம்) அகற்றப்பட்டு விடுகிறது.

قال رسول الله الربا وإن كثر فإن عاقبته إلى قل رواه الحاكم

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "வட்டி வளர்ச்சியாகத் தெரிந்தாலும் அதன் முடிவு குறைவை நோக்கியே செல்லும்." (முஸ்தத்ரகுல் ஹாகிம்)

சதவீதம் குறைவாக இருப்பினும் வட்டி ஹராமானதே. வட்டித் தொழிலைச் செய்து இறந்தவர் மறுமையில் கப்ரிலிருந்து எழுப்பப்படும் போது ஷைத்தானின் சேட்டையால் பைத்தியம் பிடித்தவரைப் போன்று எழுவார்.

வட்டி மிகப் பெரிய குற்றம். அதிலிருந்து மீண்டுவிட வேண்டும். பாவ மீட்சிக்கான வழிமுறையை அல்லாஹ் குறிப்பிடுகின்றான்.

وَإِنْ تُبْتُمْ فَلَكُمْ رُؤُوسُ أَمْوَالِكُمْ لَا تَظْلِمُونَ وَلَا تُظْلَمُونَ

ஆயினும் நீங்கள் (வட்டி வாங்கியது பற்றி மனம் வருந்தி) மீண்டு விட்டால் உங்கள் பொருளின் அசல் தொகை உங்களுக்குண்டு. (எவரும் அதை எடுத்துக் கொண்டு) உங்களை அநியாயம் செய்துவிட முடியாது. (அவ்வாறே) நீங்களும் (வட்டி வாங்கி) அநியாயம் செய்தவர்களாக மாட்டீர்கள்! (ஸூரா அல்பகறா 2:279)

இந்த இறைக்கட்டளையின்படி ஒருவர் வட்டியை விட்டு மீளும்போது அதிலுள்ள அசலை மட்டும் வாங்கிக் கொள்ள வேண்டும்.

நம்மில் பலர் தங்களது செல்வங்களைப் பாதுகாக்கும் நோக்கில் வட்டியை மையமாகக் கொண்டு நடத்தப்படும் வங்கிகளில் சேமிக்கிறார்கள். உண்மையிலேயே வேறெந்த வழியிலும் பாதுகாப்பில்லை என்று உறுதியாக அறிந்தால் மட்டுமே நிர்ப்பந்தம் என்ற அடிப்படையில் இந்த வங்கிகளில் பாதுகாப்பது அனுமதிக்கப்பட்டதாகும். இது நிர்ப்பந்த நிலையில் செத்த பிராணியைச் சாப்பிடுவது போன்றதாகும். எனவே இதற்கு மாற்று வழிகள் ஏதேனும் இருக்கின்றதா என்பதை ஆராய்வதுடன் நமது இயலாமை குறித்தும் அல்லாஹ்விடம் பாவ மன்னிப்புக் கோர வேண்டும்.

நிர்ப்பந்த நிலையுடன் வங்கியில் பணத்தைப் பாதுகாக்கும்போது

அதிலிருந்து வரும் வட்டியைத் தர்ம எண்ணமின்றி எவருக்கேனும் கொடுத்துவிட வேண்டும். ஏனெனில், அல்லாஹ் தூய்மையானவன்; தூய்மையானதையே ஒப்புக் கொள்வான். எனவே அந்த வட்டியிலிருந்து எந்த வகையிலும் பயனடையக் கூடாது. அதிலிருந்து உண்பது, குடிப்பது, அணிவது, வாகனிப்பது, தங்குவது, மனைவி, மக்கள், தாய், தந்தைக்கு செலவிடுவது போன்ற அனைத்தும் தடுக்கப்பட்டவையாகும். அதை ஸகாத் அல்லது வரியாகக் கொடுப்பதற்கோ, ஏதேனும் ஆபத்திலிருந்து நம்மைக் காத்துக் கொள்வதற்கோ செலவிடக் கூடாது. மாறாக, எவ்வித எதிர்பார்ப்புமின்றி நமது செல்வத்தை விட்டு அதை அகற்றிவிட வேண்டும்.

## 41. விற்கும் பொருளின் குறையை மறைப்பது குற்றம்

مر رسول الله صلى الله عليه وسلم على صبرة طعام فأدخل يده فيها

فنالت أصابعه بللا فقال ما هذا يا صاحب الطعام قال أصابته السماء يا

رسول الله قال أفلا جعلته فوق الطعام حتى يراه الناس من غش فليس مني

நபி (ஸல்) அவர்கள் ஓர் உணவுக் குவியலைக் கடந்து சென்றபோது அதில் தங்களது கையை நுழைத்துப் பார்த்தார்கள். அந்த தானியத்தில் ஈரத்தை உணர்ந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் "தானிய விற்பனையாளரே! இது என்ன?!" என்று கேட்டார்கள். அவர் "மழையின் காரணமாக இவ்வாறு ஆகிவிட்டது அல்லாஹ்வின் தூதரே!" என்று கூறினார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் "மக்கள் பார்க்கும்படி அதை இக்குவியலின் மேற்பகுதியிலல்லவா நீ வைத்திருக்க வேண்டும்? ஏமாற்றுபவர் நம்மைச் சார்ந்தவரல்லர்" என்று கூறினார்கள். (ஸஹீஹ் முஸ்லிம்)

இறையச்சமற்ற எத்தனையோ வியாபாரிகள் தங்களது பொருட்களின் குறைகளை மறைப்பதற்கு பல வழிகளைக் கையாளுகிறார்கள். சிலர் குறையுள்ள இடத்தில் லேபிளை ஒட்டி விடுகின்றார்கள்; சிலர் அதைப் பெட்டியின் கீழ்ப்பாகத்தில் வைத்து மறைக்கின்றார்கள்; சிலர் இயந்திரங்களின் குறையை உணர்த்தும் சப்தங்களைத் தற்காலிகமாக மறைக்க முயல்கிறார்கள்; சிலர் காலாவதியான பொருளின் தேதியை மாற்றுகின்றார்கள்; சிலர், பொருளைப் பார்ப்பதற்கே வாடிக்கையாளர்களை அனுமதிப்பதில்லை.

قال رسول الله صلى الله عليه وسلم المسلم أخو المسلم ولا يحل لمسلم

باع من أخيه بيعا فيه عيب إلا بينه له رواه أحمد وأبو داود

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமின்

சகோதரர் ஆவார். தமது சகோதரரிடம் குறையுள்ள பொருளை விற்கும்போது அக்குறையை சுட்டிக் காட்டாமல் விற்பது அவருக்கு ஆகுமானதல்ல!" (முஸ்னது அஹ்மது)

சிலர் தரமான மற்றும் தரமற்ற இருவகைப் பொருட்களையும் கலந்து ஒரே குவியலாக்கி மொத்தமாக விலை பேசி விற்கின்றார்கள். இந்தப் பொருட்கள் அனைத்தையும் விற்கிறேன் என்று கூறுவதன் மூலம் தங்களது பொறுப்பு நீங்கி விட்டதாகக் கருதுகிறார்கள். ஆனால் இதுவும் மோசடியாகும். இதில் அல்லாஹ்வின் பரக்கத் (அருள்வளம்) அகற்றப்பட்டுவிடும்.

قال رسول الله صلى الله عليه وسلم البيعان بالخيار ما لم يتفرقا فإن صدقا

وبينا بورك لهما في بيعهما وإن كتما وكذبا محقت بركة بيعهما متفق عليه

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "விற்பவரும் வாங்குபவரும் இடத்தை விட்டுப் பிரியாத வரை அவர்களுக்கு உரிமை உண்டு. இருவரும் வியாபாரத்தில் உண்மை உரைத்து (தங்களது பொருள், நாணயம் குறித்த) விவரங்களைப் பரிமாறிக் கொண்டால் அவர்களின் வியாபாரத்தில் 'பரக்கத்' அருளப்படும். இருவரும் பொய் பேசி(த் தங்களது பொருளின் குறையை) மறைத்து வியாபாரம் செய்தால் அதில் 'பரக்கத்' அகற்றப்பட்டுவிடும்." (ஸஹீஹுல் புகாரி)

## 42. வாங்கும் நோக்கமின்றி விலையை உயர்த்திக் கேட்பது குற்றம்

قال رسول الله صلى الله عليه وسلم ولا تناجشوا متفق عليه

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "வாங்கும் நோக்கமின்றி பிறரை ஏமாற்றுவதற்காக விலையை உயர்த்தாதீர்கள்." (ஸஹீஹுல் புகாரி)

அவ்வாறு செய்வது மோசடியாகும்.

قال رسول الله صلى الله عليه وسلم المكروالخديعة والخيانة في النار

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "சூழ்ச்சியும் ஏமாற்றுவதும் மோசடியும் நரகில் கொண்டு சேர்க்கும்." (ஸில்ஸிலதுல் அஹாதீஸிஸ் ஸஹீஹா)

ஏலம், பேரம், தள்ளுபடி விற்பனை நடைபெறும் இடங்களில் தரகர்களின் தரமற்ற செயல்களைக் காண்கிறோம். வாடிக்கையாளர்களை ஏமாற்ற என்னென்னவோ சூழ்ச்சிகளைச் செய்கிறார்கள். இந்த ஹராமான செயல்களால் தங்களது வருமானத்தை அசுத்தமாக்கிக் கொள்கிறார்கள்.

இந்த மோசடிப் பேர்வழிகள் ஒன்று சேர்ந்து கொண்டு தங்களது குறைந்த மதிப்புள்ள பொருளை அதிக மதிப்புள்ளதாகவும் பிறரது அதிக

மதிப்புடைய பொருளை தாங்கள் வாங்குவதற்காக குறைந்த மதிப்புடையதாகவும் சித்தரிக்கிறார்கள். ஏமாற்றியும், விலைகளை உயர்த்தியும் அல்லாஹ்வின் அடியார்களுக்கு சிரமம் தருகிறார்கள்.

## 43. ஜுமுஆவின் (இரண்டாவது) பாங்குக்குப் பின் வியாபாரம் செய்வது குற்றம்

يَٰٓأَيُّهَا ٱلَّذِينَ ءَامَنُوٓا۟ إِذَا نُودِىَ لِلصَّلَوٰةِ مِن يَوْمِ ٱلْجُمُعَةِ فَٱسْعَوْا۟ إِلَىٰ ذِكْرِ ٱللَّهِ

وَذَرُوا۟ ٱلْبَيْعَ ذَٰلِكُمْ خَيْرٌ لَّكُمْ إِن كُنتُمْ تَعْلَمُونَ

நம்பிக்கையாளர்களே! வெள்ளிக்கிழமையன்று ஜுமுஆ தொழுகைக்காக (பாங்கு சொல்லி) நீங்கள் அழைக்கப்பட்டால், வியாபாரத்தை விட்டுவிட்டு அல்லாஹ்வை நினைவுகூர நீங்கள் விரைந்து செல்லுங்கள். அறிவுடையோராக இருந்தால் இதுவே உங்களுக்கு மிக நன்று. (ஸூரா அல்ஜுமுஆ 62:9)

வியாபாரிகளில் சிலர் ஜுமுஆ நாளில் (இரண்டாவது) பாங்குக்குப் பிறகும் தங்களது வியாபாரத்தைத் தொடர்கிறார்கள். இந்தப் பாவத்தில், வாங்குபவர்களுக்கும் பங்களிக்கிறார்கள். அந்த நேரத்தில் மிஸ்வாக் (பல்துலக்கும் குச்சி) வியாபாரம் செய்தாலும், அது முறைகேடான வியாபாரமேயாகும்.

சில உணவகங்கள், தொழிற்சாலைகளில் தங்களது வேலையாட்களை ஜுமுஆ தொழுகையின் நேரத்திலும் வேலை செய்யுமாறு நிர்ப்பந்திக்கிறார்கள். இவ்வாறான வியாபாரங்களால் அவர்கள் இலாபமடைவது போலத் தோன்றினாலும் உண்மையில் அவர்கள் பெரும் நஷ்டத்தையே அடைந்து கொள்கிறார்கள். இத்தகையோரிடம் பணிபுரிபவர்கள் பின்வரும் நபிமொழியை கவனத்தில் கொள்ள வேண்டும்.

عن النواس بن سمعان قال قال رسول الله صلى الله عليه وسلم لا طاعة

لمخلوق في معصية الخالق رواه في شرح السنة

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ்வுக்கு மாறு செய்வதில் மனிதர்களுக்குக் கட்டுப்படக் கூடாது. (ஷர்ஹுஸ் ஸுன்னா)

## 44. வேலை செய்தவருக்குக் கூலியை மறுப்பது கூடாது

قال رسول الله صلى الله عليه وسلم قال الله تعالى ثلاثة أنا خصمهم

يوم القيامة رجل أعطى بي ثم غدر ورجل باع حرا فأكل ثمنه ورجل

استأجر أجيرا فاستوفى منه ولم يعطه أجره رواه البخاري

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரழி) அவர்கள்

அறிவிக்கிறார்கள்: அல்லாஹ் கூறினான், "மூன்று நபர்களுடன் மறுமை நாளில் நான் வாதிடுவேன். (அவர்களில் முதலாமவன்) என் பெயர் கூறி வாக்குறுதியளித்து பின்பு அதை நிறைவேற்றாமல் மோசடி செய்த மனிதன், (இரண்டாமவன்) சுதந்திர மனிதனை அடிமையாக்கி விற்று அந்தக் கிரயத்தைச் சாப்பிட்டவன், (மூன்றாமவன்) வேலைக்கு கூலிக்காரரை அமர்த்தி, அவரிடம் முழுமையாக வேலை வாங்கி, பிறகு கூலியைக் கொடுக்காதவன்." (ஸஹீஹுல் புகாரி)

வேலையாட்களுக்கு உரிய கூலியைக் கொடுக்காமலிருக்கும் அநீதி நமது சமுதாயத்தில் பல வடிவங்களில் நடைபெறுகிறது. வேலை செய்ததற்கு உன்னிடம் எந்த ஆதாரமும் இல்லை என்று கூறிவிடுவதும் அதில் ஒன்று.

ஆனால் அவனது உரிமையை உலகில் மறுத்தாலும் மறுமையில் அல்லாஹ் அவனது கூலியை வீணடித்துவிட மாட்டான். அநீதி இழைத்தவனின் நன்மையை எடுத்து பாதிக்கப்பட்டவனுக்கு அளிப்பான்.

சிலர் ஒப்புக் கொண்ட கூலியை விட குறைவாகக் கொடுக்கிறார்கள்.

அல்குர்ஆன் கூறுகிறது:

وَيْلٌ لِّلْمُطَفِّفِينَ

அளவில் மோசடி செய்பவர்களுக்குக் கேடுதான்.

(ஸூரா அல்முத்தஃபிஃபீன் 83:1)

சில தொழிலதிபர்கள் ஒரு குறிப்பிட்ட ஊதியத்தை நிர்ணயம் செய்து தொழிலாளர்களை வேலையில் அமர்த்துகிறார்கள். அவர்கள் வேலையில் சேர்ந்தபின் ஊதியத்தைக் குறைத்து ஒப்பந்தப் பத்திரத்தை மாற்றியமைத்து தொழிலாளர்களின் வயிற்றில் அடிக்கிறார்கள். மனம் நொந்த அவர்கள் அல்லாஹ்விடமே முறையிடுகிறார்கள்.

இவ்வாறு அநீதி இழைப்பவர் முஸ்லிமாகவும் பாதிக்கப்படுபவர் முஸ்லிமல்லாதவராகவும் இருந்தால் அநீதியிழைத்தவர் அத்தொழிலாளியின் உள்ளத்தில் அல்லாஹ்வுடைய மார்க்கத்தைப் பற்றிய தவறான எண்ணத்தை விதைத்து அவரை நேர்வழியை விட்டு தடுத்தவராகி விடுகிறார்.

மற்றும் சிலர் அதிக நேரம் வேலை வாங்கிக் கொண்டு அந்த வேலைக்குரிய கூலியைக் கொடுப்பதில்லை; அல்லது குறிப்பிட்ட சில வருடங்களுக்காக தொழிலாளியிடம் ஒப்பந்தம் செய்துவிட்டு அந்த ஒப்பந்தக் காலம் முடிந்து ஒப்பந்தத்தைப் புதுப்பிக்கும்போது பழைய விகிதத்திலேயே சம்பளத்தை நிர்ணயிக்கின்றனர்; அல்லது வேலையை

வாங்கிக் கொண்டு சம்பளம் தர மறுத்து நீதிமன்ற உத்தரவுக்குப்பின் வேறு வழியின்றி மனவெறுப்புடன் கொடுக்கின்றனர்.

இன்னும் சிலர், தாமதப்படுத்தும்போது தொழிலாளர் சம்பளம் கேட்க மறந்து விட்டால் அந்தத் தொகையை தொழிலில் போட்டு லாபமீட்டிக் கொள்ளலாம் என்றும், அதை வங்கியில் போட்டு வட்டியை அனுபவிக்கலாம் என்றும் எண்ணுகிறார்கள்.

ஆனால், அந்தப் பரிதாபத்திற்குரிய தொழிலாளர்கள் அன்றைய நாள் உணவுக்கு வழியின்றியும் தொலை தூரத்திலிருக்கும் அவர்களது மனைவி மக்கள் வறுமையில் சிக்கி வாடிக் கொண்டிருக்கும் நிலையில் அவர்களுக்கு உதவி செய்ய இயலாமலும் தவிக்கிறார்கள். இரக்கமற்ற இத்தகைய முதலாளிகளுக்கு மறுமையில் கொடூர வேதனையுண்டு.

## 45. திருப்பிக் கொடுக்கும் எண்ணமின்றி கடன் வாங்குவது கூடாது

கடமைகளில் எல்லாம் மிக முக்கியத்துவம் வாய்ந்த கடமை, அல்லாஹ்வுக்குச் செய்ய வேண்டிய கடமையே ஆகும். அதே நேரம் அல்லாஹ்வுக்கான கடமைகளில் குறை செய்தவன் தவ்பா - பாவ மீட்சியின் மூலம் மன்னிப்பை அடைய முடியும். ஆனால் அடியார்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளிலோ எவ்வித குறைவுமின்றி முழுமையாக நிறைவேற்றியாக வேண்டும்.

إِنَّ ٱللَّهَ يَأْمُرُكُمْ أَن تُؤَدُّواْ ٱلْأَمَانَاتِ إِلَىٰٓ أَهْلِهَا

(நம்பிக்கையாளர்களே! உங்களிடம் நம்பி ஒப்படைக்கப்பட்ட) அமானிதப் பொருள்களை அவற்றின் சொந்தக்காரர்களிடம் நீங்கள் ஒப்படைத்து விடும்படியும் மக்களுக்கு மத்தியில் நீங்கள் தீர்ப்புக் கூறினால் (பாரபட்சமின்றி) நீதியாகவே தீர்ப்பளிக்குமாறும் நிச்சயமாக அல்லாஹ் உங்களுக்குக் கட்டளையிடுகிறான்..... (ஸூரா அந்நிஸா 4:58)

சிலர், அவசியத் தேவைகளுக்கு என்றில்லாமல் வீடு, கார் வாங்குவது போன்ற ஆடம்பரங்களுக்காக கடன் பெறுகிறார்கள். அவ்வாறான கடன்கள் பெரும்பாலும் ஹராமாகவோ ஹராமுக்கு நெருக்கமாகவோ இருக்கின்றன. ஆடம்பரத்துக்காக கடன் வாங்குவதால் அதைக் குறித்த காலத்தில் நிறைவேற்ற முடிவதில்லை; அல்லது திருப்பியளிக்காமல் மோசடி செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் உருவாகி விடுகிறது.

عن أبي هريرة عن النبي صلى الله عليه وسلم قال من أخذ أموال الناس

يريد أداءها أدى الله عنه ومن أخذ يريد إتلافها أتلفه الله رواه البخاري

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நிறைவேற்றும் நோக்கத்துடன் கடன் வாங்குபவனுக்கு அல்லாஹ் அதை நிறைவேற்றும் வாய்ப்பை அளிக்கிறான். பிறரது பொருளை அழித்துவிட வேண்டுமென்ற நோக்கத்துடன் கடன் வாங்கினால் அல்லாஹ் அவனை அழித்திடுவான்.

(ஸஹீஹுல் புகாரி)

கடன் வாங்குவதையும் அதில் முறைகேடாக நடப்பதையும் சிலர் அலட்சியமாக நினைக்கிறார்கள். ஆனால் அது அல்லாஹ்விடம் மிகப் பெரிய குற்றமாகும்.

ஒருவர் அல்லாஹ்வின் வழியில் தம் உயிரை அர்ப்பணிப்பது மகத்தான நற்செயலாக இருந்தும் அவர் கடனாளியாக இருந்தால் அதன் காரணமாக சுவர்க்கம் செல்வதை விட்டு நிறுத்தி வைக்கப்படுவார்.

قال رسول الله صلى الله عليه وسلم سبحان الله ماذا أنزل من التشديد في الدين والذي نفسي بيده لو أن رجلا قتل في سبيل الله ثم أحيي ثم أقتل ثم أحيي ثم أقتل وعليه دين ما دخل الجنة حتى يقضى عنه دينه رواه النسائي

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: அல்லாஹ் மிகத் தூயவன். கடன் விஷயத்தில் அல்லாஹ் எவ்வளவு கடுமையாகக் கட்டளையிட்டிருக்கிறான்! எனது உயிர் எவனது கைவசம் இருக்கிறதோ அவன் மீது ஆணையாக! கடனாளியான ஒருவர் அல்லாஹ்வின் பாதையில் கொல்லப்பட்டார்; பின்பு உயிர் கொடுக்கப்பட்டு மறுபடியும் கொல்லப்பட்டார்; பின்பு உயிர் கொடுக்கப்பட்டு மறுபடியும் கொல்லப்பட்டார்; இருப்பினும் அவரது கடன் நிறைவேற்றப்படாத வரை அவர் சுவர்க்கத்தில் நுழையமாட்டார்.

(ஸுனனுன் நஸாயி)

## 46. ஹராமான முறையில் சம்பாதித்து உண்பது கூடாது

அல்லாஹ்வைப் பற்றிய அச்சமில்லாதவர்கள் செல்வத்தை எந்த வழியில் ஈட்டுகிறோம், எந்த வழியில் செலவிடுகிறோம் என்பதைப் பொருட்படுத்தாமல் திருட்டு, லஞ்சம், ஏமாற்றுதல், தடை செய்யப்பட்ட வியாபாரம், அனாதைகளின் சொத்து, பொதுச் சொத்து ஆகியவற்றில் வரம்பு மீறல், சோதிடம், விபசாரம், பிச்சையெடுத்தல், மிரட்டிப் பறித்தல் போன்ற எந்த வகையிலானாலும் எப்படியேனும் பொருளீட்டி செல்வத்தைப் பெருக்கிக் கொள்கிற வெறித்தன சிந்தனை உடையவர்களாக இருக்கிறார்கள்.

தான் சம்பாதித்த அந்த ஹராமான பொருளின் மூலமே உண்டும்

உடுத்தியும் மகிழ்கிறார்கள். ஆடம்பர வீடுகளையும், கார்களையும் வாங்குகிறார்கள். இதனால் அவர்களது வயிற்றுக்கு வெளியேயும் ஹராம் நிரம்பி வழிகிறது.

قال رسول الله صلى الله عليه وسلم كل لحم نبت من سحت فالنار أولى به

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "ஹராம், தடுக்கப்பட்ட வருமானத்தின் மூலம் வளர்ந்த சதைக்கு நரக நெருப்பே தகுதியானதாகும்."

(ஸஹீஹுல் ஜாமிஃ)

மறுமை நாளில் "எவ்வாறு சம்பாதித்தாய்? எப்படி செலவு செய்தாய்?" என ஒவ்வொரு மனிதனிடமும் விசாரணை செய்யப்படும். அதுதான் அந்த ஹராமை சம்பாதித்தவனுக்கான அழிவின் ஆரம்பம். எனவே இவ்வுலகிலேயே தன்னிடமுள்ள ஹராமானவற்றை அகற்றிட வேண்டும். தன்னிடமுள்ளது மற்றவர்களுக்குரியதாக இருந்தால் அதை அதன் உரிமையாளரிடம் திருப்பிக் கொடுத்து அவரது மன்னிப்பையும் பெற வேண்டும். ஏனென்றால் மறுமை நாள் வந்துவிட்டால் ஹராமை விட்டு மீள்வதற்கான அனைத்து வாயில்களும் அடைக்கப்பட்டு, ஒருவர் தமது நன்மைகள் அனைத்தையும் இழக்க வேண்டிய நிலை ஏற்பட்டு விடும்.

## 47. இலஞ்சம் வாங்குவதும் கொடுப்பதும் குற்றம்

பிறரின் உரிமையை அபகரிப்பதற்காக அல்லது ஒரு முறைகேட்டினைச் செய்வதற்காக இலஞ்சம் கொடுப்பது குற்றமாகும்.

وَلَا تَأْكُلُوٓا۟ أَمْوَٰلَكُم بَيْنَكُم بِٱلْبَٰطِلِ وَتُدْلُوا۟ بِهَآ إِلَى ٱلْحُكَّامِ لِتَأْكُلُوا۟ فَرِيقًا مِّنْ أَمْوَٰلِ ٱلنَّاسِ بِٱلْإِثْمِ وَأَنتُمْ تَعْلَمُونَ

(அன்றி) உங்களுக்கிடையில் ஒருவர் மற்றவரின் பொருட்களைத் தவறான முறையில் உண்ணாதீர்கள். (உங்கள் தரப்பு பொய் என) நீங்கள் அறிந்திருந்தும் (இதர) மனிதர்களின் பொருட்களில் எதனையும் பாவமான வழியில் விழுங்கிவிடும் பொருட்டு (இலஞ்சம் கொடுக்க) அதிகாரிகளிடம் செல்லாதீர்கள். (ஸூரா அல்பகறா 2:188)

قال رسول الله صلى الله عليه وسلم لعن الله الراشي والمرتشي في الحكم

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: "தீர்ப்புக்காக இலஞ்சம் வாங்குபவனையும் கொடுப்பவனையும் அல்லாஹ் சபிக்கிறான்." (ஸஹீஹுல் ஜாமிஃ)

ஒருவர் தம்முடைய உரிமையைப் பெறுவதற்காகவோ எதிர்வரும்

தீமைகளைத் தடுக்கவோ இலஞ்சம் கொடுப்பதைத் தவிர வேறு வழியே இல்லை என்ற நிர்ப்பந்த நிலையில் இலஞ்சம் கொடுப்பது ஆகும். இது உயிரைக் காப்பாற்றிக் கொள்கிற நோக்கில் பன்றி இறைச்சி சாப்பிடுவதைப் போன்றதாகும்.

இன்று பல அலுவலகங்களில் பொருளீட்டுகிற வகைகளில் சுலபமான ஒரு வழியாக இலஞ்சம் மாறிவிட்டது. கவர் கொடுக்காமல் காரியம் நடக்காது என்பதே அரசு அலுவலகங்களின் நிலையாக உள்ளது.

பெரும்பாலான வர்த்தகங்களும் வேலைகளும் இலஞ்சமின்றி தொடங்கப்படுவதில்லை. முடிவு பெறுவதுமில்லை. ஏழைகள் கூட தங்களது உரிமையைப் பெற சக்திக்கு மீறிய தொகையை இலஞ்சமாகக் கொடுக்க வேண்டியுள்ளது. இலஞ்சம் கொடுக்க இயலாத பலர் தங்களது உரிமைகளைப் பெற முடியாமல் தவித்துக் கொண்டிருக்கிறார்கள்.

அதிகாரிகளுக்கு இலஞ்சம் கொடுப்பவர்களுக்கு வேலைகள் விரைந்து முடிக்கப்படுகின்றன. கொடுக்க மறுப்பவர்களின் வேலை நடப்பதேயில்லை; அல்லது சோர்வை ஏற்படுத்துகிற அளவிற்கு மிக நீண்ட தாமதத்துக்குப் பிறகே காரியம் நடக்கிறது. இவ்வாறான அநீதிகளைக் களையும் நோக்கில்தான் நபி (ஸல்) அவர்கள் இலஞ்சத்தில் கூட்டாகும் அனைவரையும் அல்லாஹ்வின் அருளை விட்டு தூக்கியெறிந்தார்கள்.

قال رسول الله صلى الله عليه وسلم لعنة الله على الراشي والمرتشي

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக இப்னு உமர் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: "இலஞ்சம் வாங்குபவன் மற்றும் கொடுப்பவன் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும்." (ஸுனன் இப்னு மாஜா)

## 48. நிலத்தை அபகரிப்பது குற்றம்

அல்லாஹ்வைப் பற்றிய அச்சமில்லாத மனிதன் பிறர் பொருளை அல்லது பிறர் நிலத்தை அபகரிப்பதில் தனது ஆற்றலைச் செலவிடுகிறான்.

قال رسول الله صلى الله عليه وسلم من أخذ من الأرض شيئا بغير حقه

خسف به يوم القيامة إلى سبع أرضين رواه البخاري

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக இப்னு உமர் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: "பூமியில் தனக்கு உரிமையற்ற நிலத்தை அபகரிப்பவன் மறுமை நாளில் ஏழு பூமிகள் வரை பூமிக்குள் செருகப்படுவான்." (ஸஹீஹுல் புகாரி)

عن يعلى بن مرة قال سمعت النبي صلى الله عليه وسلم يقول أيما رجل ظلم شبرا من الأرض كلفه الله عز وجل أن يحفره حتى يبلغ به سبع أرضين ثم يطوقه يوم القيامة حتى يقضي بين الناس رواه أحمد وفي رواية لأحمد والطبراني عنه قال سمعت رسول الله صلى الله عليه وسلم يقول من أخذ أرضا بغير حقها كلف أن يحمل ترابها إلى المحشر

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக யஃலா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: "ஒரு சாண் அளவு நிலத்தை அநீதியாக அபகரிப்பவனுக்கு (மறுமையில்) ஏழு பூமிகள் வரை அந்த நிலத்தைத் தோண்டுமாறு அல்லாஹ் தண்டனையளிப்பான். பின்பு மனிதர்களுக்குத் தீர்ப்பளிக்கப்படும் வரை அது அவனது கழுத்தில் வளையமாகத் தொங்கவிடப்படும். மற்றோர் அறிவிப்பில் வந்துள்ளதாவது: "யார் உரிமையின்றி நிலத்தை அபகரிப்பாரோ, அவர் அதன் மண்ணை மஹ்ஷர் மைதானத்தில் சுமந்து வர நிர்ப்பந்திக்கப்படுவார்." (முஃஜமுத் தப்ரானி)

நிலத்தின் எல்லைகளை மாற்றியமைத்து தனது நில அளவை அதிகரித்துக் கொள்வதும் மோசடியாகும்.

قال رسول الله صلى الله عليه وسلم لعن الله من غير منار الأرض

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "நிலத்தில் (எல்லையின்) அடையாளத்தை மாற்றியவனை அல்லாஹ் சபித்து விட்டான்."

(ஸஹீஹ் முஸ்லிம்)

## 49. பிள்ளைகளிடம் ஏற்றத் தாழ்வு காட்டுவது குற்றம்

சிலர் தங்களது பிள்ளைகளில் சிலருக்கு முன்னுரிமையளித்து சிலரைப் புறக்கணித்து விடுவார்கள். மார்க்கம் அனுமதித்த காரணம் எதுவும் இல்லாத நிலையில் இவ்வாறு ஏற்றத் தாழ்வு காட்டுவது ஹராமாகும்.

மார்க்கம் அனுமதித்த காரணங்கள் கல்வி, நோய், கடன், குர்ஆனை மனனம் செய்த சிறப்பு, வேலை கிடைக்காதவர், பெரிய குடும்பம் உள்ளவர் போன்றவையாகும். அதே நேரத்தில் இவ்வாறான தேவைகள் மற்ற பிள்ளைகளுக்கு ஏற்பட்டால் அவர்களுக்கும் உதவி செய்வேன் என்ற உறுதி அந்தத் தந்தையிடம் இருக்க வேண்டும்.

عن النعمان بن بشير أن أباه أتى به إلى رسول الله صلى الله عليه وسلم فقال إني نحلت ابني هذا غلاما فقال أكل ولدك نحلت مثله ؟ قال لا قال فأرجعه متفق عليه

நுஃமான் இப்னு பஷீர் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நுஃமான் (ரழி) அவர்களை அவரது தந்தை பஷீர் (ரழி) அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் அழைத்துச் சென்று, "நான் எனது இந்த மகனுக்கு அடிமையை அன்பளிப்புச் செய்துள்ளேன்" என்று கூறினார். அதற்கு நபி (ஸல்) அவர்கள் "உங்கள் எல்லாப் பிள்ளைகளுக்கும் இவ்வாறு அன்பளிப்புச் செய்துள்ளீர்களா?" என வினவினார்கள். அவர் "இல்லை" என்றார். நபி (ஸல்) அவர்கள் "அதைத் திரும்பப் பெற்றுக் கொள்ளுங்கள்" என்றார்கள்.

(ஸஹீஹுல் புகாரி)

وفي رواية فقال رسول الله لا فاتقوا الله واعدلوا بين أولادكم . قال

فرجع فرد عطيته وفي رواية أنه قال لا أشهد على جور رواه مسلم

மற்றோர் அறிவிப்பில் வந்துள்ளது: நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள், "அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள்! உங்கள் பிள்ளைகளிடையே நீதி செலுத்துங்கள்." நுஃமான் (ரழி) அவர்கள் கூறினார்கள்: "எனது தந்தை திரும்பி வந்து (எனக்களித்த) அந்த அன்பளிப்பைத் திரும்பப் பெற்றுக் கொண்டார்கள்." மற்றோர் அறிவிப்பில் வந்துள்ளது: "அப்படியானால் என்னை சாட்சியாக்காதே! நிச்சயமாக நான் ஒரு குற்றச் செயலுக்கு சாட்சியாக மாட்டேன்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

(ஸஹீஹ் முஸ்லிம்)

சில குடும்பங்களில் அல்லாஹ்வின் அச்சமின்றி பிள்ளைகளிடையே ஒருவருக்கு மட்டும் முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. இதன் விளைவாக அப்பிள்ளைகளுக்குள் விரோதமும் குரோதமும் அதிகரித்து அவர்கள் ஒருவருக்கொருவர் பகைவர்களாகி விடுகிறார்கள். சிலர் ஒரு மகன் தன்னைப் போன்றிருக்கிறான் என்றெண்ணியும், சிலர் ஒரு மனைவியின் மக்களுக்கு முன்னுரிமையளித்து மற்ற மனைவிக்குப் பிறந்த தம் பிள்ளைகளைப் புறக்கணிக்கவும் செய்கிறார்கள். சிலர் ஒரு பிள்ளைக்கு உயர் கல்வியளித்து மற்ற பிள்ளைகளுக்கு அதை மறுப்பார்கள். இவை அனைத்தும் அந்தத் தந்தைக்குக் கேடாகவே முடியும்; புறக்கணிக்கப்பட்டவர்கள் பெற்றோரின் எதிரிகளாகி விடுவார்கள்.

قال رسول الله صلى الله عليه وسلم لمن فاضل بين أولاده في العطية

أليس يسرك أن يكونوا في البر سواء قال بلى قال فلا إذا رواه الإمام أحمد

தமது பிள்ளைகளுக்கு மத்தியில் வேறுபாடு காட்டியவரிடம் நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள்: "உனது பிள்ளைகள் உனக்கு உபகாரம் செய்வதில் சமமாக இருப்பது உனக்கு மகிழ்ச்சியளிக்காதா? அவர் "அளிக்கும்" என்றார். "அப்படியெனில் (ஏற்றத் தாழ்வு காட்ட) வேண்டாம்" என்றார்கள்.

(முஸ்னது அஹ்மது)

## 50. மரண சாசனத்தில் நஷ்டம் விளைவிப்பது குற்றம்

மார்க்கச் சட்டப்படி தம்மையும் பிறரையும் நஷ்டத்திலிருந்து பாதுகாப்பது கடமையாகும். இதற்கு உதாரணம், மார்க்கம் எவர்களுக்கு வாரிசுரிமையை நிர்ணயித்திருக்கிறதோ அவர்களுக்கு உரிய பங்கைக் கொடுக்காமல் இருப்பது அவர்களுக்கு நஷ்டம் விளைவிப்பதாகும். இது குறித்து நபி (ஸல்) அவர்கள் எச்சரித்துக் கூறினார்கள்.

قال رسول الله صلى الله عليه وسلم من ضار أضرالله به ومن شاق شق الله عليه

பிறருக்கு நஷ்டம் விளைவிப்பவனுக்கு அல்லாஹ் நஷ்டம் விளைவிப்பான். பிறருக்கு சிரமமளிப்பவனுக்கு அல்லாஹ் சிரமமளிப்பான்

(முஸ்னது அஹ்மது)

அல்லாஹ் கூறுகிறான்:

مِن بَعْدِ وَصِيَّةٍ يُوصَىٰ بِهَآ أَوْ دَيْنٍ غَيْرَ مُضَآرٍّ

எனினும் (இந்தக் கடனையும் மரண சாசனத்தையும் கொண்டு வாரிசுகளில் எவருக்கும்) நஷ்டப்படுத்தாதவனாக இருக்க வேண்டும்.

(ஸூரா அந்நிஸா 4:12)

இவ்வாறு நஷ்டம் விளைவிப்பது பல விதங்களில் நடைபெறுகிறது. 1. வாரிசுகளில் ஒருவருக்கு வாரிசுரிமையைக் கொடுக்க மறுப்பது. 2. வாரிசுகளுக்கு மார்க்கம் நிர்ணயித்ததற்கு முரணாக மரண சாசனம் எழுதுவது. 3. மூன்றில் ஒரு பங்கைவிட அதிகமாக தர்மத்திற்கென ஒதுக்குவது.

சில இடங்களில் மார்க்கச் சட்டப்படி தீர்ப்பளிக்கும் நீதிபதிக்குக் கட்டுப்படாமல் மார்க்கத்துக்கு முரணாகத் தீர்ப்பளிக்கும் நீதிமன்றங்களுக்குச் செல்கிறார்கள். வக்கீல் முன்னிலையில் அநீதியாக எழுதப்பட்ட உயில்களைக் காண்பித்து மார்க்கத்துக்கு முரணான பங்கீட்டைப் பெற்றுக் கொள்கிறார்கள்.

அவர்களுடைய கைகள் எழுதியதாலும் அவர்களுக்குக் கேடுதான். அவர்கள் அதைக் கொண்டு பொருள் சம்பாதிப்பதாலும் அவர்களுக்குக் கேடுதான்.

## 51. பரிந்துரை செய்ததற்காக அன்பளிப்புப் பெறுவது குற்றம்

பட்டம், பதவி, செல்வாக்கு ஆகியவை அல்லாஹ்வின்

அருட்கொடையாகும். அந்த அருட்கொடைகளுக்காக அல்லாஹ்வைப் புகழ்ந்து சமுதாய முன்னேற்றத்திற்காக அவற்றைப் பயன்படுத்த வேண்டும்.

قال رسول الله صلى الله عليه وسلم من استطاع منكم أن ينفع أخاه فليفعل

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "உங்களில் ஒருவர் தமது சகோதரருக்கு ஏதேனும் நன்மையளிக்க முடிந்தால் அதைச் செய்யட்டும்." (ஸஹீஹ் முஸ்லிம்)

தமது சகோதரருக்கு ஏற்பட்ட ஏதேனும் ஒரு துன்பத்தைக் களையவோ, நன்மை செய்யவோ தமது பதவியைப் பயன்படுத்துவது நன்மைக்குரிய செயலாகும். தூய மனத்துடன் உதவி செய்பவர் அல்லாஹ்விடம் நற்கூலியைப் பெறுவார்.

قال رسول الله صلى الله عليه وسلم اشفعوا تؤجروا

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "பரிந்துரை செய்யுங்கள்; நற்கூலி அளிக்கப்படுவீர்கள்." (ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

பரிந்துரைக்குப் பகரமாக எதையேனும் பெற்றுக் கொள்வதை மார்க்கம் தடை செய்கிறது.

قال رسول الله صلى الله عليه وسلم قال من شفع لأحد شفاعة فأهدى

له هدية عليها فقبلها فقد أتى بابا عظيما من أبواب الربا

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "தாம் செய்த பரிந்துரைக்குப் பகரமாக அன்பளிப்புப் பெறுபவர் வட்டியின் வகைகளில் மிகப் பெரிய ஒன்றைச் செய்தவராவார்." (முஸ்னது அஹ்மது)

சிலர் தங்களது செல்வாக்கின் மூலம் ஒருவருக்குப் பதவி கிடைப்பதற்கும், பதவி உயர்வுக்கும், சிறந்த மருத்துவ சிகிச்சைக்கும் ஏற்பாடு செய்கிறார்கள். அதற்குப் பகரமாக ஏதேனும் அன்பளிப்பைப் பெற்றுக் கொள்கிறார்கள். இவ்வாறான அன்பளிப்புகள் ஹராமாகும். அன்பளிப்பு தர வேண்டும் என நிபந்தனையிடாமல் கொடுக்கப்பட்டு அதைப் பெறுவதும் குற்றமே என்பதை மேற்கண்ட நபிமொழி விவரிக்கிறது.

அல்லாஹ்வின் திருப்தியை நாடிச் செய்பவருக்கு மறுமையில் அல்லாஹ்வின் நற்கூலியே மிகச் சிறந்ததாகும்.

பிரபலத் தாபியீ ஹஸன் இப்னு ஸஹ்ல் (ரஹ்) அவர்களிடம் ஒருவர் பரிந்துரை செய்யுமாறு கேட்டுக் கொண்டார். அதை ஹஸன் (ரஹ்) அவர்கள் நிறைவேற்றிக் கொடுத்தார்கள். பயன்பெற்ற மனிதர் நன்றி கூற

வந்தார். அவரிடம் ஹஸன் (ரஹ்) அவர்கள் "எதற்காக எனக்கு நன்றி சொல்கிறாய்? நாங்கள் பொருளுக்கு ஸகாத் இருப்பதுபோல பதவிக்கும் ஸகாத் இருப்பதாகக் கருதுகிறோம்" என்று கூறினார்கள்.

## 52. முகத்தில் அடிப்பது; பிராணிகளின் முகத்தில் சூடுபோடுவது கூடாது

نهى رسول الله صلى الله عليه وسلم عن الضرب في الوجه وعن الوسم في الوجه

ஜாபிர் (ரழி) அவர்கள் கூறுகிறார்கள்: முகத்தில் அடிப்பதையும் பிராணிகளின் முகத்தில் சூடுபோடுவதையும் நபி (ஸல்) அவர்கள் தடை செய்தார்கள். (ஸஹீஹ் முஸ்லிம்)

முகத்தில் அடிப்பது: பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளையும், ஆசிரியர்கள் தங்கள் மாணவர்களையும் தண்டிக்கும்போது அவர்களுடைய முகத்தில் அறைகிறார்கள்; சிலர் தங்களது பணியாளர்களின் முகத்தில் அறைகிறார்கள். இது அல்லாஹ் கண்ணியப்படுத்திய முகத்தை இழிவுபடுத்துவதாகும். அத்துடன் மென்மையான உறுப்புகளை உடைய முகத்தில் அடிப்பது அவற்றில் காயம் பட்டு பின்பு பழிக்குப் பழி (கிஸாஸ்) வாங்குவதற்கும் காரணமாகிவிடும்.

சூடு வைப்பது: கால் நடைகளை வளர்ப்பவர்கள் தங்களது பிராணியை அடையாளம் கண்டு கொள்வதற்காக சூடு வைப்பது ஹராமாகும். மேலும், இதில் அல்லாஹ் படைத்த உருவத்தை மாற்றிய குற்றமும் கால்நடைகளை வேதனை செய்த குற்றமும் உண்டு.

## 53. உளவு பார்ப்பது, ஒட்டுக் கேட்பது கூடாது

அல்லாஹ் கூறுகின்றான்:

وَلَا تَجَسَّسُوا۟

எவருடைய குற்றத்தையும் நீங்கள் துருவித் துருவி விசாரித்துக் கொண்டிருக்க வேண்டாம். (ஸூரா அல்ஹுஜுறாத் 49:12)

قال رسول الله صلى الله عليه وسلم من استمع إلى حديث قوم وهم له

كارهون صب في أذنيه الآنك يوم القيامة

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: "ஒரு சமுதாயத்தவரின் செய்தியை அவர்கள் விரும்பாத நிலையில் கேட்பானேயானால் மறுமை நாளில் அவன் காதுகளில் காய்ச்சசப்பட்ட ஈயத்தை ஊற்றப்படும்."

(ஸஹீஹுல் ஜாமிஃ)

அவ்வாறே குறிப்பிட்ட சில நபர்களைப் பற்றி அவர்கள் அறியாத நிலையில் அவர்களின் செய்திகளைக் கேட்டு, அவர்களுக்கு துன்பம் விளைவிக்கும் நோக்கில் மற்றவர்களிடம் தெரிவிப்பதும் குற்றமாகும். இவ்வாறு செய்பவர்கள் இரு வகையான குற்றங்களைச் செய்தவர்களாவார்கள்.

1) உளவு பார்ப்பது, 2) கோள் சொல்வது.

قال رسول الله صلى الله عليه وسلم لا يدخل الجنة قتات متفق عليه

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக ஹுதைஃபா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: கோள் சொல்பவன் சுவனம் புகமாட்டான்.

(ஸஹீஹுல் புகாரி)

## 54. அண்டை வீட்டாருக்குத் தீங்கிழைப்பது குற்றம்

அல்லாஹு தஆலா பின்வரும் வசனத்தில் அண்டை வீட்டாருக்குரிய கடமைகளை நமக்கு விவரிக்கின்றான்.

وَٱعْبُدُواْ ٱللَّهَ وَلاَ تُشْرِكُواْ بِهِ شَيْئاً وَبِٱلْوَالِدَيْنِ إِحْسَاناً وَبِذِي ٱلْقُرْبَىٰ وَٱلْيَتَامَىٰ وَٱلْمَسَاكِينِ وَٱلْجَارِ ذِي ٱلْقُرْبَىٰ وَٱلْجَارِ ٱلْجُنُبِ وَٱلصَّاحِبِ بِٱلجَنْبِ وَٱبْنِ ٱلسَّبِيلِ وَمَا مَلَكَتْ أَيْمَانُكُمْ إِنَّ ٱللَّهَ لاَ يُحِبُّ مَن كَانَ مُخْتَالاً فَخُوراً

அல்லாஹ் ஒருவனேயே வணங்குங்கள். அவனுக்கு யாதொன்றையும் இணையாக்காதீர்கள். தாய் தந்தைக்கு நன்றி செய்யுங்கள். (அவ்வாறே) உறவினர்களுக்கும் அனாதைகளுக்கும் ஏழைகளுக்கும் அண்டை வீட்டிலுள்ள உறவினர்களுக்கும் அன்னிய அண்டை வீட்டாருக்கும் (எப்பொழுதும்) உங்களுடன் இருக்கக்கூடிய நண்பர்களுக்கும் பயணிகளுக்கும் உங்களிடமுள்ள அடிமைகளுக்கும் (அன்புடன் நன்றி செய்யுங்கள்). எவன் கர்வம் கொண்டு பெருமையாக நடக்கின்றானோ அவனை நிச்சயமாக அல்லாஹ் நேசிப்பதில்லை. (ஸூரா அந்நிஸா 4:36)

عن أبي هريرة قال قال رسول الله صلى الله عليه وسلم والله لا يؤمن والله لا يؤمن والله لا يؤمن قيل من يا رسول الله قال الذي لا يأمن جاره بوائقه

அபூஹுரைரா (ரழி) அவர்கள் கூறுகிறார்கள்: "அல்லாஹ்வின் மீது ஆணையாக! அவன் இறைநம்பிக்கையாளனாக (முஃமின்) ஆகமாட்டான். அல்லாஹ்வின் மீது ஆணையாக! அவன் இறைநம்பிக்கையாளனாக ஆகமாட்டான்.. அல்லாஹ்வின் மீது ஆணையாக! அவன் இறைநம்பிக்கையாளனாக ஆகமாட்டான்." என்று (மூன்று முறை) நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். "அவன் யார் அல்லாஹ்வின் தூதரே!"

என்று வினவப்பட்டது. அதற்கு நபி (ஸல்) அவர்கள் "எவனுடைய அண்டை வீட்டார் அவனது கெடுதியை விட்டுப் பாதுகாப்பு பெறவில்லையோ அவன்தான்" என்று பதிலளித்தார்கள்.

(ஸஹீஹுல் புகாரி)

ஒருவரைப் பற்றி அவரது அண்டை வீட்டார் புகழ்வதையும் இகழ்வதையும் கொண்டுதான் அம்மனிதர் நல்லவர், கெட்டவர் என்பதற்கான அளவுகோளை நபி (ஸல்) அவர்கள் நிர்ணயித்தார்கள்.

عن عبد الله قال قال رجل لرسول الله صلى الله عليه وسلم كيف لي أن
أعلم إذا أحسنت وإذا أسأت قال النبي إذا سمعت جيرانك يقولون أن قد
أحسنت فقد أحسنت وإذا سمعتهم يقولون قد أسأت فقد أسأت

நபி (ஸல்) அவர்களிடம் ஒரு மனிதர், "அல்லாஹ்வின் தூதரே! நான் செய்வது நன்மையா தீமையா என்பதை நான் எப்படி அறிவது?" என வினவினார். அப்போது நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "நீ செய்தது நன்மை என உனது அண்டை வீட்டார் கூறுவதைக் கேட்டால் நீ நன்மை செய்தவராவாய். நீ தவறு செய்தாய் என அவர்கள் சொல்வதைச் செவியுற்றால் நீ தவறிழைத்தவராவாய்." (முஸ்னது அஹ்மது)

அண்டை வீட்டாருக்கு நோவினை செய்வது பல வகைப்படும். உ.ம்: இருவருக்கும் பொதுவான சுவரில் கட்டை, ஆணி, கம்பி போன்றவற்றை அடிப்பது; அல்லது பக்கத்து வீட்டாருக்கு காற்று, சூரிய வெளிச்சம் தடையாகும் வகையில் அவர்களது அனுமதியின்றி தனது வீட்டை உயரமாகக் கட்டிக் கொள்வது; அவர்களது வீட்டின் மறைவிடங்களைக் காணும் வகையில் ஜன்னல்களை அமைத்துக் கொள்வது; அண்டை வீட்டாருக்கு இடையூறளிக்கும் விதமாக சப்தங்களை அதிகரித்து கதவுகளைத் தட்டுவது; குறிப்பாக, இரவு நேரங்களில் அண்டை வீட்டில் உள்ளவர்களைத் தூங்க விடாமல் சப்தமிட்டு பேசுவது; கூச்சலிடுவது.

(அவர்களுடைய பொருட்களை அவர்களின் அனுமதி பெறாமல் எடுப்பது; அப்பொருட்களின் தேவை அவர்களுக்கு இருக்கிறதா, இல்லையா என்பதையெல்லாம் கண்டுகொள்ளாமல் அவற்றை இரவல் கேட்டு தொல்லை செய்வது; அப்பொருட்களைத் திரும்பக் கொடுக்கும்போது அவற்றில் குறைகளை ஏற்படுத்தித் தருவது; அல்லது அதற்கு மாறாக அதைவிட தரம் குறைந்த பொருளைத் தருவது.)

மேலும், அசுத்தமானவற்றை அவர்களது வீட்டினருகே போடுவது; அவர்களது குழந்தைகளை அடிப்பது; அவர்களின் குடும்ப விவகாரங்களைப் பற்றி பிற வீடுகளில் புறம் பேசுவது போன்ற அனைத்தும்

அவர்களுக்கு நோவினையளிக்கும் விஷயங்களாகும். மற்றவர்களுக்குத் தீமை செய்வதைவிட அண்டை வீட்டாருக்கு தீமை செய்வது பாவத்தைப் பன்மடங்காக்கிவிடும்.

قال رسول الله صلى الله عليه وسلم لأن يزني الرجل بعشر نسوة أيسر عليه من أن يزني بامرأة جاره ... قال لأن يسرق الرجل من عشرة أبيات أيسر عليه من أن يسرق من بيت جاره رواه أحمد

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: தனது அண்டை வீட்டுப் பெண்ணிடம் விபசாரம் செய்வதைவிட ஏனைய பத்துப் பெண்களிடம் விபசாரம் செய்வது (தண்டனையில்) இலகுவானதாகும். தன் அண்டை வீட்டில் திருடுவதைவிட ஏனைய பத்து வீடுகளில் திருடுவது இலகுவானதுமாகும். (அல்அதபுல் முஃப்ரத்)

இழிவான சிந்தனை கொண்டவர்களில் சிலர், அண்டை வீட்டு ஆண் ஊரில் இல்லாத காலங்களில் அல்லது இரவு வேலைக்குச் சென்றிருக்கும் சமயத்தில் தவறான எண்ணத்துடன் அண்டை வீட்டுக்குள் நுழைகின்றார்கள். இவர்களுக்கு நிச்சயம் மறுமையில் நோவினை தரும் வேதனைகள் உண்டு.

## 55. ஒரு துளி மது அருந்துவதும் குற்றம்

يَـٰٓأَيُّهَا ٱلَّذِينَ آمَنُوٓا۟ إِنَّمَا ٱلْخَمْرُ وَٱلْمَيْسِرُ وَٱلْأَنصَابُ وَٱلْأَزْلَـٰمُ رِجْسٌ مِّنْ عَمَلِ ٱلشَّيْطَـٰنِ فَٱجْتَنِبُوهُ لَعَلَّكُمْ تُفْلِحُونَ

நம்பிக்கையாளர்களே! நிச்சயமாக மதுவும், சூதாட்டமும், சிலை வணக்கமும் அம்பெறிந்து குறி கேட்பதும் ஷைத்தானுடைய அருவருக்கத்தக்க வேலைகளில் உள்ளவையாகும். ஆகவே, இவற்றிலிருந்து நீங்கள் விலகிக் கொள்ளுங்கள். (அதனால்) நீங்கள் வெற்றியடைவீர்கள். (ஸூரா அல்மாயிதா 5:90)

அவற்றைத் தவிர்த்திட வேண்டுமென அல்லாஹ் கூறியிருப்பது, மது முற்றிலும் தடை செய்யப்பட்டதற்குரிய ஆதாரமாகும். மதுவையும் நிராகரிப்பாளர்கள் வணங்கும் சிலைகளையும் இணைத்துக் கூறியிருப்பதே அது எவ்வளவு கொடிய பாவம் என்று தெளிவாக்குகிறது. எனவே அல்லாஹ் மதுவை விட்டு தவிர்ந்திடத்தான் சொல்கிறானே தவிர ஹராமென்று கூறவில்லை என்று எவரும் வாதிட முடியாது.

மது அருந்துபவனுக்கான தண்டனை குறித்து நபி (ஸல்) அவர்கள் வன்மையாக எச்சரித்துள்ளார்கள்.

وعن جابر أن رجلا قدم من اليمن فسأل النبي صلى الله عليه وسلم عن شراب يشربونه بأرضهم من الذرة يقال له المزر فقال النبي صلى الله عليه وسلم أو مسكر هو ؟ قال نعم قال كل مسكر حرام إن على الله عهدا لمن يشرب المسكر أن يسقيه من طينة الخبال . قالوا يا رسول الله وما طينة الخبال ؟ قال عرق أهل النار أو عصارة أهل النار رواه مسلم

ஜாபிர் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: யமன் நாட்டிலிருந்து வந்த ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம் தங்களின் நாட்டில் சோளத்திலிருந்து செய்யப்படும் 'முஸர்' எனும் பானத்தைப் பற்றிக் கேட்டார். நபி (ஸல்) அவர்கள், "அது போதையூட்டக் கூடியதா" எனக் கேட்டதற்கு, அவர் "ஆம்" என்றார். அப்போது நபி (ஸல்) அவர்கள் "போதையூட்டக் கூடியது அனைத்தும் ஹராம். போதையூட்டக் கூடியதைக் குடிப்பவனுக்கு 'தீனத்துல் கிபால்'ஐ குடிக்க வைப்பதாக அல்லாஹ் தன் மீது உறுதி எடுத்துள்ளான்" எனக் கூறினார்கள். தோழர்கள் "அல்லாஹ்வின் தூதரே! 'தீனத்துல் கிபால்' என்றால் என்ன?" என்று வினவினார்கள். "அது நரகவாசிகளின் வியர்வை அல்லது நரகவாசிகளின் சீழ், சலம்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
(ஸஹீஹ் முஸ்லிம்)

قال رسول الله صلى الله عليه وسلم من مات مدمن خمر لقي الله وهو كعابد وثن

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: "நிரந்தரமாக மது அருந்திய நிலையில் மரணிப்பவன் சிலை வணங்கியவனைப் போன்று அல்லாஹ்வைச் சந்திப்பான்." (முஃஜமுத் தப்ரானி)

இக்காலத்தில் மக்கள் மது பானங்களுக்குப் பல பெயர்களிட்டு அருந்துகின்றனர். இதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் முன்னறிவிப்புச் செய்துள்ளார்கள்.

قال رسول الله صلى الله عليه وسلم ليشربن ناس من أمتي الخمر يسمونها بغير اسمها

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "எனது சமுதாயத்தில் சிலர் மதுவை அருந்துவார்கள். அதற்கு மதுவின் பெயரல்லாத வேறு பெயர்களைச் சூட்டிக் கொள்வார்கள்." (முஸ்னது அஹ்மது)

சிலர் அல்லாஹ்வையும் அவனது தூதரையும் ஏமாற்றுவதாக நினைத்துக் கொண்டு 'ஹெல்த் டானிக்' என்பது போன்ற பெயர்களில் மது அருந்துகிறார்கள்.

يُخَادِعُونَ ٱللَّهَ وَٱلَّذِينَ آمَنُوا وَمَا يَخْدَعُونَ إِلاَّ أَنْفُسَهُم وَمَا يَشْعُرُونَ

அவர்கள் அல்லாஹ்வையும் நம்பிக்கை கொண்டவர்களையும் வஞ்சிக்(கக் கருது)கின்றனர். ஆனால் அவர்கள் தங்களையே தவிர (பிறரை) வஞ்சிக்க முடியாது. (இதை) அவர்கள் உணர்ந்து கொள்ள மாட்டார்கள்.

(ஸூரா அல்பகறா 2:9)

இவ்வாறான தடுமாற்றங்களுக்கு இஸ்லாமில் இடமில்லை.

قال رسول الله صلى الله عليه وسلم كل مسكر خمر وكل خمر حرام

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "போதையளிக்கும் அனைத்தும் மதுவாகும். போதையளிக்கும் அனைத்தும் ஹராமாகும்."

(ஸஹீஹ் முஸ்லிம்)

ஆக மூளையைப் பலவீனப்படுத்தி சிந்தனையில் தடுமாற்றத்தை ஏற்படுத்தும் அனைத்துமே ஹராமாகும். அது குறைவாக இருப்பினும் சரியே, அவற்றின் பெயர்கள் வித்தியாசப்படுவது ஒரு பொருட்டே அல்ல!

قال رسول الله صلى الله عليه وسلم من شرب الخمر وسكر لم تقبل له صلاة أربعين صباحا وإن مات دخل النار فإن تاب تاب الله عليه وإن عاد فشرب فسكر لم تقبل له صلاة أربعين صباحا فإن مات دخل النار فإن تاب تاب الله عليه وإن عاد فشرب فسكر لم تقبل له صلاة أربعين صباحا فإن مات دخل النار فإن تاب تاب الله عليه وإن عاد كان حقا على الله أن يسقيه من ردغة الخبال يوم القيامة قالوا يا رسول الله وما ردغة الخبال قال عصارة أهل النار رواه ابن ماجة

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "மது அருந்தி போதையில் ஆழ்ந்து விட்டவனின் 40 நாட்களின் தொழுகை ஏற்கப்படாது. அவன் மரணித்தால் நரகில் நுழைவான். அவன் பாவ மீட்சி கோரினால் அல்லாஹ் அவனை மன்னிக்கிறான். அதன் பிறகும் அவன் மது அருந்தி போதையில் ஆழ்ந்தால் அவனது 40 நாட்கள் தொழுகை ஏற்கப்படாது. அவன் மரணித்தால் நரகில் நுழைவான். அவன் பாவ மீட்சி கோரினால் அல்லாஹ் அவனை மன்னிக்கிறான். திரும்பவும் மது அருந்தி போதையில் ஆழ்ந்தால்

அவனது 40 நாட்கள் தொழுகை ஏற்கப்படாது. அவன் மரணித்தால் நரகில் நுழைவான். அவன் பாவமீட்சி கோரினால் அல்லாஹ் அவனை மன்னிக்கிறான். அதன் பிறகும் மது அருந்தினால் அவனுக்கு மறுமையில் 'ரத்கத்துல் கிபால்'ஐ குடிக்க வைப்பது அல்லாஹ்வின் மீது கடமையாகிவிட்டது" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள், தோழர்கள் "அல்லாஹ்வின் தூதரே! ரத்கத்துல் கிபால் என்றால் என்ன?" என்று வினவினார்கள். "அது நரகவாசிகளின் சீழ்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (ஸுனன் இப்னு மாஜா)

மது வகைகளைக் குடிப்போருக்கான தண்டனையே அல்லாஹ்விடம் மிகக் கடுமையாக இருக்கும் நிலையில், மனிதனை உடனடியாக வீழ்த்திவிடும் ஹெராயின், அபின் போன்ற போதைப் பொருட்களுக்கான அல்லாஹ்வின் தண்டனை எத்தகையதாக இருக்கும்?

## 56. தங்கம் வெள்ளிப் பாத்திரங்களைப் பயன்படுத்துவது கூடாது

உணவைச் சமைக்கவும் உண்ணவும் தங்கம் அல்லது வெள்ளிப் பாத்திரங்களைப் பயன்படுத்துவது செல்வந்தர்களின் வீடுகளில் இருக்கின்றன. குறைந்த பட்சம் தங்கத்தாலோ வெள்ளியாலோ மெருகிடப்பட்ட பாத்திரங்களையாவது வைத்திருப்பது எதார்த்தமாகி விட்டது. பெரிய ஓட்டல்களிலும் அன்பளிப்புப் பொருட்களிலும் இவை முதன்மை பெறுகின்றன. சிலர் தங்களது வீடுகளில் பயன்படுத்துவதைத் தவிர்த்தாலும் விருந்துக்குச் செல்லும் இடங்களில் தங்கம், வெள்ளிப் பாத்திரங்களை எவ்விதத் தயக்கமுமின்றி பயன்படுத்துகிறார்கள்.

இவை அனைத்தும் மார்க்கத்தால் விலக்கப்பட்டவையாகும். இப்படிப் பயன்படுத்துபவர்களை நபி (ஸல்) அவர்கள் எச்சரித்துள்ளார்கள்.

قال رسول الله صلى الله عليه وسلم إن الذي يأكل أو يشرب في آنية

الذهب والفضة إنما يجرجر في بطنه نارجهنم رواه مسلم

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக உம்மு ஸலமா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: தங்கம் அல்லது வெள்ளிப் பாத்திரத்தில் உண்பவன், குடிப்பவன் வயிற்றில் நரக நெருப்பையே விழுங்குகிறான். (ஸஹீஹ் முஸ்லிம்)

இந்த நபிமொழி தங்கம், வெள்ளியினால் செய்யப்பட்ட அனைத்து வகையான பாத்திரங்களுக்கும் பொருந்தும்.

உணவுத் தட்டுகள், எடுத்துச் சாப்பிடுவதற்குரிய முள் கரண்டிகள், உணவை வெட்டி சாப்பிடுவதற்குரிய கத்திகள், கரண்டிகள், விருந்துகளில்

உணவை வைப்பதற்குப் பயன்படுத்தப்படும் பாத்திரங்கள், திருமண நிகழ்ச்சிகளில் இனிப்பு வகைகளை அன்பளிப்பாக கொடுப்பதற்காகப் பயன்படுத்தப்படும் பெட்டிகள் என அனைத்தும் இதில் உள்ளடங்கும்.

சிலர் "நாங்கள் தங்கம், வெள்ளிப் பாத்திரங்களை அலமாரிகளில் அழகுக்காக வைத்துள்ளோம்'' என்று கூறி இக்குற்றத்தை நியாயப்படுத்துகிறார்கள். ஆனால் அதுவும் குற்றமே! ஏனெனில், இவ்வாறு செய்வது அவற்றைப் பயன்படுத்துவதற்கு வழிவகுத்து விடலாம்.

## 57. பொய்யும் பொய் சாட்சியமும் பெரும்பாவங்கள்

فَٱجْتَنِبُوا۟ ٱلرِّجْسَ مِنَ ٱلْأَوْثَٰنِ وَٱجْتَنِبُوا۟ قَوْلَ ٱلزُّورِ

ஆகவே, சிலை வணக்கத்தின் அசுத்தத்தை விட்டும் நீங்கள் தப்பித்துக் கொள்ளுங்கள். அன்றி, பொய்யான வார்த்தைகளை விட்டும் நீங்கள் தப்பித்துக் கொள்ளுங்கள். (ஸூரா அல்ஹஜ்ஜு 22:30)

عن عبد الرحمن بن أبي بكرة عن أبيه قال كنا عند رسول الله صلى الله عليه وسلم فقال ألا أحدثكم بأكبر الكبائر ثلاثا قالوا بلى يا رسول الله قال الإشراك بالله وعقوق الوالدين قال وجلس وكان متكئا قال وشهادة الزور أوقال قول الزور قال فما زال رسول الله يقولها حتى قلنا ليته سكت

அப்துர் ரஹ்மான் இப்னு அபூபக்ரா (ரழி) அவர்கள் தமது தந்தை கூறியதாக அறிவிக்கிறார்கள்: நாங்கள் நபி (ஸல்) அவர்களிடம் அமர்ந்திருந்தோம். அவர்கள் "பாவங்களிலெல்லாம் மிகப் பெரிய பாவத்தை நான் அறிவிக்கட்டுமா?" என மூன்று முறை கூறினார்கள். பிறகு "அது அல்லாஹ்வுக்கு இணைவைப்பதும், பெற்றோருக்கு நோவினை செய்வதும்" என்று கூறிவிட்டு, சாய்ந்திருந்த அவர்கள் எழுந்து அமர்ந்து, "அறிந்து கொள்ளுங்கள்! பொய் பேசுவதும் பொய் சாட்சியமும் (மிகப் பெரிய பாவம்தான்); பொய் பேசுவதும் பொய் சாட்சியமும் (மிகப் பெரிய பாவம்தான்)" என்று கூறினார்கள்.

அபூபக்ரா (ரழி) அவர்கள் கூறுகிறார்கள்: "நபியவர்கள் அமைதியாக வேண்டுமே என்று நாங்கள் சொல்லுமளவு நபி (ஸல்) அவர்கள் திரும்பத் திரும்ப சொல்லிக் கொண்டேயிருந்தார்கள்." (ஸஹீஹுல் புகாரி)

ஒருவர் மீதான கோபத்தின் காரணமாகவோ சில ஆதாயங்களுக்காகவோ பொய் சாட்சி கூறுவது இன்று பெருகி வருகின்றது. இதனால் ஏராளமான சமூகச் சீர்கேடுகள் உருவாகி, பலருடைய

உரிமைகள் பறிக்கப்படுகின்றன; நிரபராதிகள் தண்டிக்கப்படுகிறார்கள். சிலர் தங்களுக்கு உரிமையற்றதை அபகரித்துக் கொள்கிறார்கள்.

பொய் சாட்சி கூறுவது பலவிதங்களில் நடைபெறுகின்றன. நீதிமன்றங்களில் தங்களுக்கு சாட்சி எவரும் இல்லாத நிலையில் வழக்குக்காக வரும் மற்றொருவரை அணுகி, "உனக்கு நான் சாட்சி கூறுகிறேன்; எனக்கு நீ சாட்சி சொல்" என்று கூறி வீடு, நிலத்தை தன்னுடையதாக நிரூபிக்க அல்லது தன்னை நிரபராதி என நிரூபிப்பதற்காக பொய் சாட்சிகளைத் தயார் செய்வது நடைமுறையில் உள்ளது. உண்மை நிலையைத் தெரிந்து கொண்ட பிறகே சாட்சி கூற வேண்டும் எனப் பின்வரும் குர்ஆன் வசனம் விவரிக்கிறது.

وَمَا شَهِدْنَآ إِلاَّ بِمَا عَلِمْنَا

"உண்மையாகவே எங்களுக்குத் தெரிந்ததையே தவிர (வேறு எதையும்) நாங்கள் சாட்சி கூறவில்லை." (ஸூரா யூஸுஃப் 12:81)

## 58. புறம் பேசுவது பெரும்பாவம்

புறம் பேசவும் பிறரது குறைகளை ஆராய்வது இன்றைய சபைகளில் பரவலாகக் காணப்படுகின்றன. ஆனால், இதை அல்லாஹ் தடை செய்திருக்கின்றான். மிக இழிவான ஓர் உதாரணத்தைக் கூறுகின்றான்.

وَلاَ يَغْتَب بَّعْضُكُم بَعْضاً أَيُحِبُّ أَحَدُكُمْ أَن يَأْكُلَ لَحْمَ أَخِيهِ مَيْتاً
فَكَرِهْتُمُوهُ

உங்களில் ஒருவர் மற்றெவரையும் புறம் பேச வேண்டாம். உங்களில் எவனும் தன்னுடைய இறந்த சகோதரனின் மாமிசத்தைப் புசிக்க விரும்புவானா? அதை நீங்கள் வெறுப்பீர்களே!

(ஸூரா அல்ஹுஜுறாத் 49:12)

قال رسول الله صلى الله عليه وسلم أتدرون ما الغيبة ؟ قالوا الله ورسوله
أعلم قال ذكرك أخاك بما يكره قيل أفرأيت إن كان في أخي ما أقول
قال إن كان فيه ما تقول فقد اغتبته وإن لم يكن فيه ما تقول فقد بهته

புறம் பேசுவதின் பொருளை நபி (ஸல்) அவர்கள் தெளிவுபடுத்தியவர்களாக "புறம் என்றால் என்னவென்று அறிவீர்களா?" எனக் கேட்டார்கள். தோழர்கள் "அல்லாஹ்வும் அவனது தூதருமே நன்கறிந்தவர்கள்" என்றார்கள். நபி (ஸல்) அவர்கள், "உமது சகோதரர் பற்றி அவர் வெறுக்கும் ஒன்றைப் பேசுவது" எனக் கூறினார்கள். "நான் சொன்னது என் சகோதரரிடம் இருந்தால்?" என்று வினவப்பட்டபோது

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "நீ சொன்னது அவரிலே இருந்தால் புறம் பேசியவனாவாய். அவரிலே அது இல்லையென்றால் அவரைப் பற்றி நீ அவதூறு கூறியவனாவாய்." (ஸஹீஹ் முஸ்லிம்)

புறம் என்றால் ஒரு முஸ்லிம் சகோதரரைப் பற்றி அவர் விரும்பாத விஷயங்களைப் பேசுவதாகும். அது அவரது உடல், உருவம், தொழில், குணம் என அவர் சம்பந்தப்பட்ட எதுவாயினும் சரியே!

புறம்பேசுவது அல்லாஹ்விடம் மிக வெறுப்புக்குரியதாக இருந்தும் மக்களில் அதிகமானவர்கள் இதில் அலட்சியமாகவே இருக்கின்றார்கள்.

قال رسول الله صلى الله عليه وسلم الربا اثنان وسبعون بابا أدناها مثل

إتيان الرجل أمه وإن أربى الربا استطالة الرجل في عرض أخيه

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: வட்டி 72 வாயில்களை உடையது. அதில் மிகக் குறைந்தது தாயுடன் உறவு கொள்வது போன்று. வட்டிகளிலெல்லாம் மிக மோசமான வட்டி ஒருவன் தனது சகோதரனின் கவுரவத்தில் களங்கம் ஏற்படுத்துவதாகும். (அஸ்ஸில்ஸிலதுஸ் ஸஹீஹா)

சபையில் எவரேனும் மற்றொரு சகோதரரைப் பற்றி புறம் பேசினால் அதைத் தடுக்க வேண்டுமென நபி (ஸல்) அவர்கள் வலியுறுத்தினார்கள்.

قال رسول الله صلى الله عليه وسلم من رد عن عرض أخيه رد الله عن

وجهه النار يوم القيامة رواه الترمذي

"ஒருவர் தமது சகோதரரின் கவுரவத்தைக் காப்பாரேயானால் மறுமை நாளில் அவரது முகத்தை நரக நெருப்பை விட்டு அல்லாஹ் காப்பாற்றுகிறான்." (ஜாமிவுத் திர்மிதி)

இந்த நபிமொழி நமக்கு உணர்த்துவது இதுதான்: ஒரு முஸ்லிமைப் பற்றி புறம் பேசப்பட்டால் உடனடியாக அச்சபையிலிருக்கும் மற்ற சகோதரர்கள் பேசுபவரைக் கண்டித்து அவருடைய கண்ணியத்தைக் காப்பது மார்க்கக் கடமையாகும்.

## 59. கோள் சொல்வது குற்றம்

மனிதர்களிடையே ஒருவர் கூறியதை மற்றவரிடம் கூறித் திரிவது சமூகத்தில் பகைமையையும் வஞ்சத்தையும் பரவச் செய்துவிடும். இத்தகையோரை அல்லாஹ் இகழ்ந்துரைக்கின்றான்:

وَلَا تُطِعْ كُلَّ حَلَّافٍ مَّهِينٍ هَمَّازٍ مَّشَّآءٍ بِنَمِيمٍ

(நபியே!) எடுத்ததற்கெல்லாம் சத்தியம் செய்யும் அந்த அற்பனுக்கு நீங்கள் கீழ்ப்படியாதீர்கள். (அவன்) சதா (புறம் பேசிக்) குற்றம் கூறி கோள்

சொல்வதையே தொழிலாகக் கொண்டு திரிபவன். (ஸூரா அல்கலம் 68:10,11)

قال رسول الله صلى الله عليه وسلم لا يدخل الجنة قتات متفق عليه

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக ஹுதைஃபா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: "கோள் சொல்லித் திரிபவன் சுவர்க்கம் புக மாட்டான்." (ஸஹீஹுல் புகாரி)

عن ابن عباس قال مر النبي صلى الله عليه وسلم بحائط من حيطان المدينة

فسمع صوت إنسانين يعذبان في قبورهما فقال النبي يعذبان وما يعذبان

في كبير ثم قال بلى وفي رواية وإنه لكبير أما أحدهما فكان لا يستتر من

البول وأما الآخر فكان يمشي بالنميمة رواه البخاري

இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள் கூறுகிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் மதீனாவின் தோட்டங்களில் ஒரு தோட்டத்தைக் கடந்து சென்றபோது கப்ரில் வேதனை செய்யப்படும் இரு மனிதர்களின் ஓலத்தைச் செவியுற்றார்கள். அப்போது கூறினார்கள், "இருவரும் வேதனை செய்யப்படுகிறார்கள். (வெளிப்படையாக) பெரிதாகக் கருதப்படும் பாவத்துக்காக அவ்விருவரும் வேதனை செய்யப்படவில்லை." பிறகு "ஆம்! (மற்றோர் அறிவிப்பில், நிச்சயமாக அது பெரும்பாவம்) இருவரில் ஒருவர் சிறுநீர் கழித்து சுத்தம் செய்யாதவர். மற்றொருவர் கோள் சொல்லித் திரிந்தவர்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

இவற்றில் மிகக் கடுமையானது, கணவனைப் பற்றி மனைவியிடமும் மனைவியைப் பற்றி கணவனிடமும் தவறாகப் பேசி அவர்களிடையே குழப்பத்தையும் பிரிவினையையும் ஏற்படுத்துவதாகும். அவ்வாறே மேல் அதிகாரிகளிடம் ஊழியரைப் பற்றி கோள் சொல்வதும் மிகக் கெட்ட செயலாகும். கோள் சொல்வதன் அனைத்து வகைகளுமே மார்க்கத்தில் தடை செய்யப்பட்டதாகும்.

## 60. மூன்றாமவர் இருக்க இருவர் இரகசியம் பேசுவது கூடாது

முஸ்லிம்களுக்கு மத்தியில் பிளவு ஏற்படுத்த ஷைத்தான் செய்யும் முயற்சிகளில் இதுவும் ஒன்றாகும். நபி (ஸல்) அவர்கள் இதன் சட்டத்தையும், இது தடுக்கப்பட்டதன் காரணத்தையும் விவரித்துள்ளார்கள்.

قال رسول الله صلى الله عليه وسلم إذا كنتم ثلاثة فلا يتناجى اثنان

دون الآخر حتى تختلطوا بالناس من أجل أن ذالك يحزنه متفق عليه

நீங்கள் மூன்று நபர்களாக இருந்தால் ஒருவரை விட்டுவிட்டு இருவர்

மட்டும் இரகசியம் பேச வேண்டாம்; நீங்கள் மூவரும் மக்களுடன் கலக்கும்வரை! ஏனென்றால், அது அவருக்குக் கவலையை ஏற்படுத்தும்.

(ஸஹீஹுல் புகாரி)

அவ்வாறே நான்கு நபர்களிருக்க மூவர் மட்டும் இரகசியம் பேசுவதும் மூன்றாமவருக்குப் புரியாத மொழியில் இருவர் உரையாடுவதும் தவிர்க்க வேண்டியவை. ஏனென்றால் தவிர்க்கப்பட்டவர் தம் மனத்தில் தம்மைப் பற்றி மற்றவர்கள் சதியாலோசனையில் ஈடுபடுகிறார்கள் என்றோ, தம்மை அவமதிக்கிறார்கள் என்றோ எண்ணுவதற்கு அது காரணமாகிவிடும்.

## 61. கனவு கண்டதாகப் பொய்யுரைப்பது குற்றம்

மக்களால் புகழப்படவும், பொருளீட்டி எதிரிகளை மிரட்டவும் காணாத கனவுகளைக் கண்டதாக சிலர் கூறித் திரிகிறார்கள். கனவுகளைப் பற்றிய மக்களின் ஆழ்ந்த நம்பிக்கையைப் பயன்படுத்தி பொய்க் கனவுகளைக் கூறி ஏமாற்றி வருகிறார்கள். இத்தகையோரை மார்க்கம் வன்மையாகக் கண்டிக்கிறது.

قال رسول الله صلى الله عليه وسلم إن من أعظم الفرى أن يدعى الرجل إلى غير

أبيه أو يرى عينيه ما لم تريا ويقول على رسول الله ما لم يقل

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: இட்டுக் கட்டி பொய் கூறுவதில் மகத்தான குற்றம், தன் தந்தை அல்லாதவரை தன் தந்தை என வாதிப்பதும், கனவில் காணாததைக் கண்டதாகக் கூறுவதும், அல்லாஹ்வின் தூதர் (ஆகிய நான்) சொல்லாததை சொன்னதாகக் கூறுவதுமாகும்.

(ஸஹீஹுல் புகாரி)

قال رسول الله صلى الله عليه وسلم من تحلم بحلم لم يره كلف أن يعقد

بين شعيرتين ولن يفعل

மேலும் கூறினார்கள்: "காணாத கனவைக் கண்டதாகக் கூறுபவன் இரண்டு கோதுமை வித்துக்கிடையில் முடிச்சு போடுமாறு மறுமையில் நிர்ப்பந்திக்கப்படுவான். அதை அவனால் செய்யவே முடியாது."

(ஸஹீஹுல் புகாரி)

## 62. இறைநம்பிக்கையாளர்களையும் சாபத்திற்கு உரித்தாகாதவர்களையும் சபிப்பது கூடாது

பெரும்பாலான மனிதர்கள் தங்களது நாவைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியாமல் சாப வார்த்தைகளைப் பயன்படுத்தி விடுகிறார்கள். அவர்களது விஷ நாக்குகளால் மனிதர்கள், கால் நடைகள், உயிரற்றவை, நாட்கள், நேரம் என அனைத்தும் சபிக்கப்படுகின்றன.

சில சந்தர்ப்பங்களில் தங்களையும் தங்களுடைய பிள்ளைகளையும் சபிக்கிறார்கள். கணவன், மனைவியைச் சபிக்கிறான்; மனைவி, கணவனைச் சபிக்கிறாள். இது முற்றிலும் ஆபத்தான, மார்க்கத்தால் தடை செய்யப்பட்ட செயலாகும்.

لعن المؤمن كقتله

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஸைத் ஸாபித் இப்னு ளஹ்ஹாக் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: இறைநம்பிக்கையாளரைச் சபிப்பது அவரைக் கொலை செய்தவதைப் போன்றாகும்.

(அல் அதபுல் முஃஃப்ரத்)

பெண்களுக்கு மத்தியில் வெகு சாதாரணமாகக் கருதப்படும் சாப வார்த்தைகள் அவர்களை நரகில் தள்ளுவதற்குக் காரணமாகின்றன என்பதை நபி (ஸல்) அவர்கள் தெளிவுபடுத்தினார்கள்.

عن أبي سعيد الخدري قال خرج رسول الله صلى الله عليه وسلم في أضحى أو فطر إلى المصلى فمر على النساء فقال يا معشر النساء تصدقن فإني أريتكن أكثر أهل النار فقلن وبم يا رسول الله قال تكثرن اللعن وتكفرن العشي متفق عليه

அபூஸயீது அல்குத்ரி (ரழி) அவர்கள் கூறுகிறார்கள்: நபி (ஸல்) அவர்கள் ஈதுல் அள்ஹா அல்லது ஈதுல் ஃபித்ரு தொழ வைப்பதற்காக ஈத்காவிற்குச் சென்றபோது பெண்களைக் கடந்து சென்றார்கள். அப்போது அவர்களிடம் "பெண் சமுதாயமே! தர்மம் செய்யுங்கள்! ஏனெனில், நான் நரகில் இருப்போரில் அதிகமாக உங்களையே கண்டேன்" என்று கூறினார்கள். அப்பெண்கள், "எதன் காரணமாக அல்லாஹ்வின் தூதரே!" என வினவினார்கள். "நீங்கள் அதிகமாக சபிக்கிறீர்கள்; கணவனுக்கு மாறு செய்கிறீர்கள்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

(ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

## 63. ஒப்பாரி வைப்பது குற்றம்

துன்பத்தின்போது சப்தமிட்டு அழுவது, இறந்தவரின் புகழ்பாடுவது, முகத்தில் அறைந்து கொள்வது, சட்டையைக் கிழித்துக் கொள்வது, முடியை குறைத்துக் கொள்வது அல்லது மொட்டையடித்துக் கொள்வது ஆகிய செயல்கள் பெண்களிடம் பரவலாகக் காணப்படும் மிக வெறுக்கத்தக்க குற்றங்களாகும். நபி (ஸல்) அவர்கள் இத்தகையோரைச் சபித்துள்ளார்கள். இதற்குக் காரணம், அவர்கள் அல்லாஹ்வின் விதியைப் பொருந்திக் கொள்ளாததும், அல்லாஹ்வின் சோதனை மீது பொறுமை காக்காததுமே ஆகும்.

لعن رسول الله صلى الله عليه وسلم الخامشة وجهها والشاقة جيبها والداعية بالويل والثبور

அபூஉமாமா (ரழி) அவர்கள் கூறுகிறார்கள்: முகத்தைப் பிறாண்டிக் கொள்ளும் பெண்ணையும், சட்டையைக் கிழித்துக் கொள்ளும் பெண்ணையும், "என் கேடே! என் நாசமே!" என ஒப்பாரி வைக்கும் பெண்ணையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் சபித்துள்ளார்கள்.

(ஸுனன் இப்னுமாஜா)

قال رسول الله صلى الله عليه وسلم ليس منا من لطم الخدود وشق الجيوب ودعا بدعوى الجاهلية رواه البخاري

இப்னு மஸ்ஊது (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: "முகத்தில் அடித்துக் கொள்பவர்களும் சட்டைகளைக் கிழித்துக் கொள்பவர்களும் அறியாமைக் கால வார்த்தைகளைக் கூறுபவர்களும் நம்மைச் சார்ந்தவர்கள் அல்லர்" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

(ஸஹீஹுல் புகாரி)

قال رسول الله صلى الله عليه وسلم النائحة إذالم تتب قبل موتها تقام يوم القيامة وعليها سربال من قطران ودرع من جرب رواه مسلم

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஒப்பாரி வைப்பவள் தன் மரணத்துக்கு முன் பாவமன்னிப்பு தேடாத நிலையில் மரணிப்பாளேயானால் அவள் மறுமை நாளில் கொண்டு வரப்படும்போது அவளுக்கு தாரினால் ஆன கீழாடையும் சொரியை ஏற்படுத்தும் உருக்கு சட்டையும் அணிவிக்கப்படும். (ஸஹீஹ் முஸ்லிம்)

## 64. தகுந்த காரணமின்றி மூன்று நாட்களுக்கு மேல் பேசாதிருப்பது குற்றம்

முஸ்லிம் சகோதரர்களிடையே பகைமையை ஏற்படுத்துவது ஷைத்தானின் செயலாகும். சிலர் ஷைத்தானுக்கு அடிபணிந்து மார்க்கம் அனுமதிக்காத காரணங்களுக்காகவெல்லாம் தங்களது சகோதரர்களைத் துண்டித்து வாழ்கிறார்கள்.

சிலர் "பேச மாட்டேன்" என சத்தியம் செய்து கொண்டு எதிரில் வருபவர்களை விட்டு முகத்தைத் திருப்பிக் கொள்கிறார்கள். சபைகளில் முன், பின் அமர்ந்திருக்கும் அனைவருக்கும் ஸலாம் கூறிவிட்டு, தான் துண்டித்து வாழும் சகோதரனைப் பார்த்ததும் பார்க்காததுபோல் இருந்து கொள்கிறார்கள்.

இது சமுதாயத்தைப் பாதித்து வரும் கடுமையான நோயாகும். இதை மார்க்கம் மிக வன்மையாகக் கண்டிக்கிறது.

عن أبي هريرة أن رسول الله صلى الله عليه وسلم قال لا يحل لمسلم أن يهجر أخاه فوق ثلاث فمن هجر فوق ثلاث فمات دخل النار رواه أحمد

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: ஒரு முஃமின் தம் சகோதரரை மூன்று நாட்களுக்கு மேல் வெறுத்திடலாகாது. மூன்று நாட்களுக்கு மேல் தம் சகோதரரை வெறுத்த நிலையில் மரணித்தவர் நரகில் நுழைவார். (ஸுனன் அபூதாவூது)

قال النبي صلى الله عليه وسلم من هجر أخاه سنة فهو كسفك دمه

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூகிராஷ் அல்அஸ்லமி (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: ஒருவர் தம் சகோதரரை ஒரு வருடம் வெறுப்பாரேயானால் அவர் தம் சகோதரரின் இரத்தத்தை ஓட்டியவர் போன்றவராவார். (அல் அதபுல் முஃப்ரத்)

உறவைத் துண்டித்து வாழ்பவன் அல்லாஹ்வின் அருளிலிருந்து அகற்றப்படுவான்.

قال رسول الله صلى الله عليه وسلم تعرض أعمال الناس في كل جمعة مرتين يوم الإثنين ويوم الخميس فيغفر لكل مؤمن إلا عبدا بينه بين أخيه شحناء فيقال اتركوا هذين حتى يفيئا رواه مسلم

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: மனிதர்களின் செயல்கள் ஒவ்வொரு வாரத்திலும் திங்கள் மற்றும் வியாழனன்று இரண்டு முறை எடுத்துக் காட்டப்படும். ஒவ்வோர் இறைநம்பிக்கையாளரின் பாவமும் மன்னிக்கப்படும். ஆனால் தங்களுக்கு மத்தியில் குரோதம் கொண்டிருக்கும் இருவரைத் தவிர! “இந்த இருவரும் (நட்புக்குத்) திரும்பும்வரை விட்டுவிடுங்கள்; அல்லது தாமதப்படுத்துங்கள்” எனச் சொல்லப்படும். (ஸஹீஹ் முஸ்லிம்)

அந்த நேரத்தில் ஒருவர் மன்னிப்பு கோர விரும்பினால் அவர் மற்றவரைச் சந்தித்து ஸலாம் கூறிவிட வேண்டும். அப்போது அம்மனிதர் ஸலாமுக்கு பதில் கூறவில்லையென்றால் மன்னிப்பு கோரியவர் தம் குற்றத்தை விட்டு நீங்கி விடுகிறார்; பதில் கூற மறுத்தவர் மட்டுமே பாவியாவார்.

قال رسول الله صلى الله عليه وسلم لا يحل لمسلم أن يهجر أخاه فوق ثلاثة أيام يلتقيان فيعرض هذا ويعرض هذا وخيرهما الذي يبدأ بالسلام

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஅய்யூப் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: ஒரு மனிதர் தம் சகோதரரை மூன்று நாட்களுக்கு மேலாக வெறுத்திருப்பது கூடாது. இருவரும் சந்தித்துக் கொள்கிறார்கள். இவர் அவரையும் அவர் இவரையும் புறக்கணிக்கிறார்கள். அந்த இருவரில் சிறந்தவர் முந்தி ஸலாம் சொல்பவரே! (அல் அதபுல் முஃப்ரத்)

தீமையில் நிலைத்திருப்பவர், தொழாதவர் போன்ற மார்க்கக் காரணங்களுக்காக வெறுப்பது அனுமதிக்கப்பட்டதாகும். அவரை வெறுப்பதால் அவர் தமது தவறை உணர்ந்திடுவார் என்று நம்பிக்கையிருந்தால் அவரை வெறுத்து ஒதுக்குவது (வாஜிப்) அவசியம்.

ஆனால் தீமைகளை வெறுத்து ஒதுங்கும்போது அவரிடம் தவறுகளும் தீமைகளும் அதிகரித்துவிடும் என்று நம்பினால் அவரை வெறுத்து ஒதுக்கி விடாமல் அரவணைத்து நேர்வழியின்பால் திருப்பிட வேண்டும். தொடர்ந்து உபதேசித்தும் பயனில்லையென்று புறக்கணித்துவிடுவது சமூகத்திற்குத் தீங்குதானே தவிர நன்மை எதுவும் கிடையாது.

## 65. தந்தையை மாற்றிக் கூறுவது குற்றம்

ஒருவர் தம்முடைய தந்தையல்லாத வேறொருவரின் மகனாகத் தம்மைக் கூறிக் கொள்வதும், தமது இனம் அல்லாத வேறோர் இனத்துடன் தம்மை இணைத்துக் கொள்வதும் தடுக்கப்பட்டதாகும். இதைச் சிலர் பொருளாதார ஆதாயத்துக்காக அல்லது புகழுக்காகச் செய்கிறார்கள். சிலர் சிறு வயதில் தம்மைக் கைவிட்டுச் சென்ற தந்தையின் மீதுள்ள கோபத்தால் செய்கிறார்கள். இவை அனைத்தும் தடுக்கப்பட்ட செயல்களாகும்.

عن سعد وأبي بكرة قالا قال رسول الله صلى الله عليه وسلم من ادعى

إلى غير أبيه وهو يعلم أنه غير أبيه فالجنة عليه حرام متفق عليه

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூபக்ரா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: "தன் தந்தை யார் என்பதைத் தெரிந்திருந்தும் அவர் அல்லாதவருடன் தன்னை இணைத்துக் கூறுபவனுக்குச் சுவர்க்கம் 'ஹராம்' ஆகும்." (ஸஹீஹுல் புகாரி)

சிலர் தங்களது மனைவி மீதுள்ள கோபத்தால் 'அவள் நடத்தை சரியில்லாதவள்; அவளது குழந்தையின் தந்தை நானல்ல' என்று எவ்வித ஆதாரமுமின்றி அபாண்டமாகப் பழி சுமத்துகின்றார்கள்.

தீய நடத்தையுள்ள சில பெண்கள் கணவனல்லாத வேறோர் ஆணுடன் தொடர்பு கொண்டு விபசாரத்தில் குழந்தையைப் பெற்றெடுத்து, தங்களது கணவனே அதன் தந்தை எனக் கூறி மோசடி செய்கின்றார்கள். நபி

(ஸல்) அவர்கள் இவை அனைத்தையும் மிகக் கடுமையாக எச்சரித்துள்ளார்கள்.

நடத்தை சரியில்லாதவளெனத் தன் மனைவி மீது ஒருவன் குற்றம் சாட்டுவது குறித்து பின்வரும் இறைவசனம் இறக்கப்பட்டது.

وَٱلَّذِينَ يَرْمُونَ أَزْوَاجَهُمْ وَلَمْ يَكُنْ لَهُمْ شُهَدَآءُ إِلَّآ أَنفُسُهُمْ فَشَهَادَةُ

أَحَدِهِمْ أَرْبَعُ شَهَادَاتٍ بِاللَّهِ إِنَّهُ لَمِنَ الصَّادِقِينَ وَٱلْخَامِسَةُ أَنَّ لَعْنَةَ ٱللَّهِ

عَلَيْهِ إِن كَانَ مِنَ ٱلْكَاذِبِينَ

எவர்கள் தங்கள் மனைவிகள் மீது (விபசாரத்தைக் கொண்டு) குற்றம் கூறி தங்களையன்றி அவர்களிடம் (நான்கு) சாட்சிகள் இல்லாமலிருந்தால் அதற்காக அச்சமயம், நிச்சயமாக தான் உண்மையே கூறுவதாக அல்லாஹ்வின் மீது நான்கு முறை சத்தியம் செய்து கூறி ஐந்தாவது முறை (இவ்விஷயத்தில்) தான் பொய்யனாக இருந்தால் 'நிச்சயமாக அல்லாஹ்வினுடைய சாபம் தன் மீது உண்டாவதாக!' என்றும் அவன் சத்தியம் செய்து கூற வேண்டும். (ஸூரா அந்நூர் 24:6,7)

இந்த வசனம் இறக்கப்பட்டபோது நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: எந்தவொரு பெண் அவளது சமூகத்தினுள், அச்சமூகத்தைச் சேராத ஒருவரை இணைத்து விடுகிறாளோ அவளுக்கு அல்லாஹ்விடத்தில் எவ்விதப் பங்குமில்லை. அல்லாஹ் அவளை ஒருபோதும் சுவர்க்கத்தினுள் நுழைவிக்க மாட்டான். தனது குழந்தையைத் தனக்குரியதல்ல என்று மறுப்பவனை அல்லாஹ் மறுமை நாளில் பார்க்க மாட்டான். உலகில் முன் வந்த சமுதாயத்தினர் பின்வந்த சமுதாயத்தினர் அனைவரின் முன்னிலையில் அவனை இழிவுபடுத்துவான். (ஸுனன் அபூதாவூது)

## 66. சூதாட்டம், பந்தயம் கூடாது

அறியாமைக் கால அரபியர்களிடையே பல வகையான சூதாட்டங்களும் பந்தயங்களும் நடைமுறையில் இருந்தன.

يَـٰٓأَيُّهَا ٱلَّذِينَ آمَنُوٓا إِنَّمَا ٱلْخَمْرُ وَٱلْمَيْسِرُ وَٱلْأَنصَابُ وَٱلْأَزْلَامُ رِجْسٌ مِّنْ

عَمَلِ ٱلشَّيْطَانِ فَٱجْتَنِبُوهُ لَعَلَّكُمْ تُفْلِحُونَ

நம்பிக்கையாளர்களே! நிச்சயமாக மதுவும், சூதாட்டமும் சிலை வணக்கமும் அம்பெறிந்து குறி கேட்பதும் ஷைத்தானுடைய அருவருக்கத்தக்க வேலைகளில் உள்ளவையாகும். ஆகவே, இவற்றை விட்டு நீங்கள் விலகிக்கொள்ளுங்கள். (அதனால்) நீங்கள் வெற்றியடைவீர்கள். (ஸூரா அல்மாயிதா 5:90)

பத்து நபர்கள் சேர்ந்து ஒட்டகை ஒன்றை வாங்கி பின்பு சீட்டுக் குலுக்கிப் போட்டு 7 நபர்கள் மட்டும் பங்கிட்டுக் கொள்வார்கள்; மூவருக்கு எதுவும் கிட்டாது. இது அவர்களது பிரபலமான சூதாட்டமாகும்.

தற்காலத்தில் பலவகையான சூதாட்டங்கள் நடைபெறுகின்றன. உ.ம்: ஒரு பொருளை விற்கும்போது அதனுள் மதிப்பு வாய்ந்த பரிசுப் பொருட்கள் மறைத்து வைக்கப்பட்டிருப்பதாக விளம்பரம் செய்து விற்பது; லாட்டரி சீட்டு.

சூதாட்டத்துடன் கலந்த அனைத்து விளையாட்டுகளும் தடை செய்யப்பட்டவையே!

பந்தயங்கள் மூன்று வகைப்படும்:

1) மார்க்க நன்மையை அடிப்படையாகக் கொண்டவை

இவை பரிசுப் பொருட்களுடனும் அவை இல்லாமலும் அனுமதிக்கப் பட்டதாகும். உ.ம்: ஒட்டகம், குதிரைப் பந்தயம், அம்பெய்தல், உதாரணமாக குர்ஆனை மனனமிடுவது போன்ற அறிவுப் போட்டிகள்.

2) ஆகுமான விளையாட்டுகள்

கால்பந்து, ஓட்டப் பந்தயம் மற்றும் தடுக்கப்பட்ட செயல்கள் கலந்திராத விளையாட்டுகள். இவற்றில் ஈடுபடுவதால், தொழுகை தவறிவிடுதல், மறைக்க வேண்டிய உடல் பகுதிகளை வெளிக்காட்டுதல் போன்ற நிலைகள் ஏற்படாதிருக்க வேண்டும். இவ்விளையாட்டுகளில் சூதாட்டம் எந்த வகையிலும் கலந்திருக்கக் கூடாது.

3) ஹராமான அல்லது ஹராமுக்கு வழிவகுக்கும் விளையாட்டுகள்

உதாரணமாக ஃபேஷன் ஷோ, அழகிப் போட்டி, (முகத்தில் குத்தும்படியான) குத்துச் சண்டை, கோழிச் சண்டை, நாய்ச் சண்டை, ஜல்லிக்கட்டு மற்றும் மிருகங்களுக்கு மத்தியில் பந்தயம் நடத்துதல் போன்ற விளையாட்டுகள்.

## 67. சதுரங்கம் (செஸ்) விளையாடுவது கூடாது

இன்று மக்களிடையே பிரபலமாயிருக்கும் விளையாட்டுகளில் தடை செய்யப்பட்ட பல விஷயங்கள் உள்ளன.

وعن بريدة أن النبي صلى الله عليه وسلم قال من لعب بالنردشير فكأنما

صبغ يده في لحم خنـــزير ودمه رواه مسلم

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: எவனொருவன் (சதுரங்கம்) செஸ் விளையாடுகிறானோ அவன் தனது கையை பன்றியின் இறைச்சியிலும் இரத்தத்திலும் நனைத்தவனைப் போன்றவன். (ஸஹீஹ் முஸ்லிம்

وعن أبي موسى قال قال رسول الله صلى الله عليه وسلم من لعب بنرد أو نردشير فقد عصى الله ورسوله رواه أحمد

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூமூஸா அல்அஷ்அரீ (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: "செஸ் விளையாடியவர் அல்லாஹ்வுக்கும் அவனது தூதருக்கும் மாறு செய்து விட்டார். (முஸ்னது அஹ்மது)

இவ்வாறே சூதாட்டத்திற்கும் தடை செய்யப்பட்ட பந்தயத்திற்கும் வழிவகுக்கும் அனைத்து விளையாட்டுகளையும் மார்க்கம் தடை செய்துள்ளது.

## 68. இசை கேட்பது கூடாது

كان ابن مسعود يقسم بالله أن المراد بقوله ومن الناس من يشتري لهو الحديث ليضل عن سبيل الله هو الغناء (تفسير ابن كثير)

மனிதர்களில் பலர் இருக்கின்றனர். அவர்கள் வீணான விஷயங்களை விலைக்கு வாங்கி (அவற்றை மக்களுக்கு ஓதிக் காண்பித்து) அல்லாஹ்வுடைய வழியை விட்டு ஞானமின்றி மக்களை வழிகெடுத்து அதனைப் பரிகாசமாகவும் எடுத்துக் கொள்கின்றனர். இத்தகையோருக்கு இழிவு தரும் வேதனை நிச்சயமாக உண்டு. (ஸூரா லுக்மான் 31:6)

இப்னு மஸ்வூது (ரழி) அவர்கள் இந்த இறைவசனம் இசையைக் குறிக்கிறது என சத்தியம் செய்து கூறுவார்கள். (தஃப்ஸீர் இப்னு கஸீர்)

وعن أبي عامر أو أبي مالك الأشعري قال سمعت رسول الله صلى الله عليه وسلم يقول ليكونن من أمتي أقوام يستحلون الخز والحرير والخمر والمعازف رواه البخاري

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஆமிர் அல்லது அபூமாலிக் அல் அஷ்அரீ (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: "எனது உம்மத்தில் ஒரு கூட்டத்தினர் தோன்றுவார்கள். அவர்கள் பட்டாடை, மது மற்றும் இசைக் கருவிகளை ஆகுமாக்கிக் கொள்வார்கள்......" (ஸஹீஹுல் புகாரி)

قال رسول الله صلى الله عليه وسلم ليكونن في هذه الأمة خسف وقذف ومسخ وذلك إذا شربوا الخمور واتخذوا القينات وضربوا بالمعازف

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அனஸ் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: "இந்த உம்மத்தில் பூமியினுள் புதையுண்டு போவதும் கல் மழை பொழிவதும் உருமாற்றமும் ஏற்படும். அவர்கள் மதுவருந்தினால், பாடகிகளை ஏற்படுத்திக் கொண்டால், இசைக் கருவிகளை உபயோகித்தால்

அவை நிகழும்." (ஸுனனுத் திர்மிதி)

நபி (ஸல்) அவர்கள் மேளம் அடிப்பதைத் தடை செய்தார்கள். புல்லாங்குழலின் சப்தத்தை மூடனான பாவியின் சப்தம் என வருணித்தார்கள்.

இமாம் அஹ்மது (ரஹ்) அவர்களைப் போன்ற மார்க்க அறிஞர்கள் அனைத்து இசைக் கருவிகளும் ஹராம் என்று உறுதியாகக் கூறியுள்ளார்கள். எனவே, நபி (ஸல்) அவர்கள் தடை விதித்த இசைக் கருவிகளில் தற்கால இசைக் கருவிகளும் அடங்கும்.

நபிமொழியில் தடுக்கப்பட்ட முற்கால இசைக் கருவிகளைவிட தற்கால இசைக் கருவிகள் அதிகம் பாதிப்புகளை ஏற்படுத்துகின்றன. மதுவைவிட இசைக் கருவிகளின் போதையே மிகைத்தது என இப்னுல் கய்யிம் (ரஹ்) போன்ற அறிஞர்கள் கூறியுள்ளனர்.

இசையுடன் பாடும் பெண்களின் குரலும், ராகமும் சேரும்போது குற்றம் மேலும் கடுமையாகும். இதுமட்டுமின்றி, பாடல்களில் பயன்படுத்தப்படும் வார்த்தைகளில் ஆபாசமும், அசிங்கமும் கலக்கும்போது ஏற்படும் பாதிப்பும், ஆபத்தும் மிகப் பயங்கரமானது.

இசையும் பாடலும் விபசாரத்தின் தூதுவன் எனவும், அது உள்ளத்தில் நயவஞ்சகத் தன்மையை ஏற்படுத்தி விடும் எனவும் மார்க்க அறிஞர்கள் கூறியுள்ளனர்.

## 69. உயிருள்ளவற்றின் உருவங்களை வரைவது குற்றம்

وعن ابن مسعود قال سمعت رسول الله صلى الله عليه وسلم يقول إن

أشد الناس عذابا يوم القيامة المصورون رواه البخاري ومسلم

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: "உருவம் வரைபவர்கள், மறுமை நாளில் அல்லாஹ்வின் கடுமையான வேதனைக்குரியவர்கள்." (ஸஹீஹுல் புகாரி)

عن أبي هريرة قال سمعت رسول الله صلى الله عليه وسلم يقول قال الله تعالى ومن

أظلم ممن ذهب يخلق كخلقي فليخلقوا ذرة أو ليخلقوا حبة أو شعيرة

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: "அல்லாஹ் கூறுகிறான். என்னுடைய படைப்பைப் போன்றதை உருவாக்க நினைப்பவனைவிட மிகப் பெரிய அக்கிரமக்காரன் யார்? அவன் அப்படி படைப்பதாக இருந்தால் ஓர்

அணு அளவுள்ள பொருளையோ, ஒரு விதையையோ, கோதுமையையோ படைத்துக் காட்டட்டும்." (ஸஹீஹுல் புகாரி)

عن ابن عباس قال سمعت رسول الله صلى الله عليه وسلم يقول كل

مصور في النار يجعل له بكل صورة صورها نفسا فيعذبه في جهنم قال

ابن عباس فإن كنت لابد فاعلا فاصنع الشجر وما لا روح فيه

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாக இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: "உருவம் வரைந்த அனைவரும் நரகில் வீழ்வார்கள். அவர்கள் வரைந்த உருவங்களுக்கு உயிர் கொடுக்கப்படும். அவை அவனை நரகில் வேதனை செய்யும்." தொடர்ந்து இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள் கூறினார்கள்: "அப்படி நீ வரைவதாக இருந்தால் மரத்தையோ உயிரற்றவையினையோ வரைந்து கொள்!" (ஸஹீஹ் முஸ்லிம்)

இந்த நபிமொழி மனிதர்களின் உருவங்கள், உயிருள்ள பிராணிகளின் உருவங்கள் ஆகியவற்றை அச்சிடுவது, செதுக்குவது, வரைவது போன்ற அனைத்தும் தடை செய்யப்பட்டவை எனத் தெளிவாக்குகிறது.

இவ்வாறான ஆதாரங்களைக் காணும் உண்மை முஸ்லிம் அதை நான் வணங்கவில்லை; அதற்கு ஸஜ்தா செய்யவுமில்லை என்று கூறித் தனது தவறை நியாயப்படுத்தாமல் அல்லாஹ்வின் கட்டளைக்கு முழுமையாக அடிபணிய வேண்டும்.

இந்த உருவப் படங்களால் ஏற்படும் விபரீத விளைவுகளை ஆழ்ந்து சிந்திக்கும் அறிவுடைய எவரும் அவற்றை இஸ்லாம் தடை செய்ததின் தத்துவத்தை நன்கறிந்து கொள்ள முடியும். இந்த உருவங்கள் மனித இச்சையைத் தூண்டுகின்றன; மானக்கேடான காரியங்களில் மனிதனை வீழ்த்துகின்றன.

வீட்டில் உருவப் படங்கள் இருப்பது மலக்குகள் (வானவர்கள்) நுழையத் தடையாக ஆகிவிடும். எனவே, அவற்றை வீட்டிலிருந்து அகற்றுவது உண்மை முஸ்லிமின் கடமையாகும்.

عن أبي طلحة قال قال النبي صلى الله عليه وسلم لا تدخل الملائكة بيتا

فيه كلب ولا تصاوير متفق عليه

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: "நாய் அல்லது உருவப்படங்கள் உள்ள வீட்டுக்குள் மலக்குகள் நுழைய மாட்டார்கள்." (ஸஹீஹுல் புகாரி)

சில வீடுகளில் அலங்காரத்திற்காக உருவச் சிலைகள் உள்ளன. அவற்றில் சில, மாற்று மதத்தவர்களுடைய (கற்பனைக்) கடவுள்களின் உருவங்களாக இருக்கின்றன. இது மாபெரும் குற்றமாகும். மேலும் உருவப்

படங்களைச் சுவர்களில் தொங்க விடுவதும் பெரும் குற்றமாகும். இப்படித் தொங்கவிடுவது அப்படங்களைக் கண்ணியப்படுத்த வழிவகுக்கும்; அல்லது பெருமையைத் தூண்டிவிடும்.

சிலர் நினைவுக்காக நிழற்படங்களை (போட்டோக்களை) வைத்திருப்பதாகக் கூறுவார்கள். உண்மையில் உறவினர்களையும் நண்பர்களையும் இதயத்தில் நினைவு கூர்ந்து அவர்களுக்காக அல்லாஹ்வின் அருளையும் மன்னிப்பையும் தேடிப் பிரார்த்தனை செய்வதுதான் அன்பின் வெளிப்பாடாகும். எனவே இதுபோன்ற படங்களை உடனே அகற்றிட வேண்டும்.

அகராதிகள், ஆய்வு நூல்கள் போன்றவற்றில் உள்ள உருவப்படங்கள் எவ்வளவு முயன்றும் தவிர்க்க முடியாதவையாக உள்ளன. இவ்வாறே சுய அடையாள அட்டை (Identity Card ) போன்றவையும் தவிர்க்க இயலாததாகும். சில அறிஞர்கள் அலட்சியமாகக் கருதப்பட்டு காலில் மிதிபடும் படங்களை அனுமதிக்கிறார்கள்.

فَٱتَّقُواْ ٱللَّهَ مَا ٱسْتَطَعْتُمْ

அல்லாஹ் கூறுகிறான்: உங்களால் சாத்தியமான வரையில் அல்லாஹ்வுக்குப் பயந்து நடந்து கொள்ளுங்கள்.

(ஸூரா அத்தகாபுன் 64:16)

## 70. அடக்கத்தலத்தின் மீது அமர்வது, மிதிப்பது, மலம், சிறுநீர் கழிப்பது குற்றம்

وعن أبي هريرة قال قال رسول الله صلى الله عليه وسلم لأن يجلس أحدكم على
جمرة فتحرق ثيابه فتخلص إلى جلده خير له من أن يجلس على قبر رواه مسلم

நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: உங்களில் ஒருவர் அவர் நெருப்புக் கங்கின் மீது அமர்ந்து, அது அவரது ஆடையை எரித்து அவரது மேனிவரை ஊடுருவிச் சென்றுவிடுவது 'கப்ர்' அடக்கத்தலத்தின் மீது அமர்வதை விடச் சிறந்ததாகும். (ஸஹீஹ் முஸ்லிம்)

மரணித்தவரை அடக்கம் செய்யச் செல்லும் சிலர், வெகு அலட்சியமாக அருகிலிருக்கும் கப்ருகளை மிதிக்கிறார்கள்; அடக்கம் செய்யப்பட்டுள்ள முஸ்லிமுக்குரிய கண்ணியத்தை அளிப்பதில்லை.

قال رسول الله صلى الله عليه وسلم لأن أمشي على جمرة أو سيف أو أخصف نعلي برجلي
أحب إلي من أن أمشي على قبر مسلم رواه ابن ماجة

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நான் ஒரு முஸ்லிமுடைய 'கப்ர்' மீது நடப்பதைவிட நெருப்பு கங்கின் மீது நடப்பது, அல்லது வாளின் மீது நடப்பது, அல்லது எனது காலால் செருப்பைத் தைப்பது எனக்கு விருப்பமானதாகும். (ஸஹீஹ் முஸ்லிம்)

'கப்ர்' மீது நடப்பதே இத்தகு கொடிய பாவமென்றால் சிலர் கப்ருகளின் மீது கடையையோ, கடை வீதிகளையோ உருவாக்கி வியாபாரம் செய்து வருவது எவ்வளவு பெரிய குற்றம்!

மார்க்க அறிவற்ற அறிவீனர்கள்தாம் 'கப்ர்' இருக்கும் இடங்களில் மலம் மற்றும் சிறுநீர் கழிப்பார்கள். இது மிக வெட்கங்கெட்ட செயலாகும்.

قال رسول الله صلى الله عليه وسلم ما أبالي أوسط القبور قضيت

حاجتي أو وسط السوق رواه ابن ماجة

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நான் கப்ர் மீது எனது சுயத்தேவையை நிறைவேற்றி கொள்வது அல்லது கடைவீதியில் (மக்களுக்கு மத்தியில்) நிறைவேற்றிக் கொள்வது பற்றி நான் பொருட்படுத்தமாட்டேன். (ஸுனன் இப்னு மாஜா)

அதாவது, கப்ர் மீது மலம் மற்றும் சிறுநீர் கழிப்பதும் மக்கள் கூடியிருக்கும் கடை வீதியில் பலரும் பார்க்க அதைச் செய்வதும் ஒரே வகையான கேவலமாகும்.

சிதிலமடைந்து கிடக்கும் மண்ணறைகளில் குப்பைகள் மற்றும் அசுத்தங்களைக் கொட்டுபவர்களும் இந்த நபிமொழியின் எச்சரிக்கைக்கு உரியவர்களாவர். ஸியாரத் நோக்கில் அங்கு சென்று கப்ர்களுக்கு மத்தியில் நடக்க வேண்டியிருந்தால் காலணிகளை கழற்றிவிட வேண்டும்.

## 71. சிறுநீரை விட்டு தூய்மை செய்யாதிருப்பது பாவம்

மனிதனைச் செம்மைப்படுத்துவதற்கான அனைத்து விஷயங்களும் மிகத் தெளிவாக விவரிக்கப்பட்டிருப்பது இம்மார்க்கத்தின் சிறப்பியல்பாகும். அசுத்தத்தை விட்டு தூய்மையாக இருக்க வேண்டும் என்ற கட்டளையும் அதில் ஒன்றுதான்.

சிறுநீர் கழித்து சுத்தம் செய்யாமல் இருப்பதற்கு பல நிலைகளை உதாரணமாக கூறலாம். சிலர் சிறுநீர் கழித்து முடிவதற்கு முன்னதாகவே எழுந்து விடுகின்றார்கள். சிலர் சிறுநீர் கழித்தப் பிறகு அறவே சுத்தம் செய்வதில்லை; அல்லது முழுமையாக சுத்தம் செய்வதில்லை. சிலர் தெறிக்கும் இடங்களில் சிறுநீர் கழிக்கின்றார்கள். இன்று காஃபிர்களின்

அசிங்கமான பழக்கங்கள் நம்மவர்களிடமும் ஊடுருவி விட்டன. நின்று கொண்டு சிறுநீர் கழிப்பதற்காக சுவர்களில் சிறுநீர் கோப்பைகள் பொருத்தப்படுகின்றன. அதன் முன் நின்று கொண்டு வருவோர், போவோரின் பார்வையில் படும் விதமாகவே ஆடைகளைக் கழற்றி சிறுநீர் கழிக்கின்றார்கள். இச்செயலில் இரு வகையான குற்றங்கள் உள்ளன. 1) மக்களின் பார்வையை விட்டு தனது மறைவிடத்தைப் பாதுகாக்காத குற்றம். 2) சிறுநீர் கழித்துவிட்டு முறையாகச் சுத்தம் செய்யாத குற்றம்.

## இறுதி வார்த்தை

மக்களுக்கு மத்தியில் பரவி நிற்கும் தீய செயல்களைப் பற்றி என்னால் இயன்றவரை இந்நூலில் தொகுத்துள்ளேன்.

தூயவன் அல்லாஹ்வே! உன்னுடைய அழகிய பெயர்களைக் கொண்டு உன்னிடம் பிரார்த்திக்கிறேன். எங்களுக்கும் பாவங்களுக்கும் இடையில் திரையாக அமையும் உன் அச்சத்தைத் தா! சுவர்க்கத்தை அடையும் அளவு உன்னை வணங்கும் நற்பேற்றைத் தா! எங்கள் பாவங்களையும், அநீதிகளையும் மன்னித்தருள்! ஆகுமானவற்றைத் தந்து தடுக்கப்பட்டவற்றை விட்டு எங்களைக் காப்பாற்றிக் கொள். உனது அருட்கொடையைக் கொடுத்து உன்னைத் தவிர பிறரை விட்டு எங்களைத் தேவையின்றி இருக்கச் செய்! எங்களது பாவமீட்சியை ஏற்றுக் கொள்! நிச்சயமாக நீயே எங்கள் பிரார்த்தனைகளைச் செவியேற்பவன்! பதிலளிப்பவன்!!

அல்லாஹ்வின் அருளும், பாதுகாப்பும் நபி முஹம்மது (ஸல்) மீதும் அவர்களது குடும்பத்தார், தோழர்கள் அனைவர் மீதும் உண்டாகட்டுமாக!

அனைத்துப் புகழும் அகிலங்களின் அதிபதியான அல்லாஹ்வுக்கே உரியது.

